" கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

# விவேகசிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

புத்தகம். III. 1894வரு நவம்பர்மீ இலக்கம் 7.

### NOTICE TO SUBSCRIBERS.

Great laxity in the interpretation of the term "*in advance*" being observed by a large number of Subscribers, whose remittances are made at periods entirely at variance with the intention of the expression when the terms of Subscription were framed, notice is now given that the Subscription at the lower or reduced rate of Rs. 3 per annum is allowed only to those who pay their Subscriptions **strictly in advance.** No bills or demands will be sent out to Subscribers at the reduced rate. The ordinary rate of Subscription, including postage, &c., will be Rs. 3-8-0, and the arrear rate Rs. 4 per annum as hithertofore. The utmost "grace" allowable in future to old Subscribers at the reduced rate will be six weeks and to those at the ordinary rate three months. All Subscriptions not paid within three months from the beginning of the period for which they become due will be realised by V. P. P., unless those who are in arrears themselves write to intimate that they will remit their Subscriptions direct at an early date.

### கையொப்பக்காரர்களுக்கு அறிக்கை.

முன்பணம் கட்டுவோருக்கு வருஷத்துக்கு ரூபா - 3 என்று குறைந்த விகிதமான சந்தா ஏற்படுத்திய பொழுது நாம் என்ன கருத்துக்கொண்டிருந்தோமோ அதற்கு முற்றும் வித்தியாசமான காலங்களில் அனேக சந்தாதாரர்கள் தங்கள் கையொப்பத்தொகையை அனுப்பிவருவதால், இனி கட்டாயமாக முன்பணம் கட்டுகிறவர்களுக்கே குறைந்த சந்தா விகிதமான ரூபா 3 - க்கு "விவேகசிந்தாமணி" கொடுக்கப்படுமென்று இப்பொழுது எல்லாருக்கும் தெரிவிக்கிறோம். குறைந்த சந்தா விகிதப்படி கையொப்பம் செய்வோருக்கு பில், நோடீசு ஒன்றும் அனுப்பப்படமாட்டா. சாதாரணகையொப்ப விகிதம் தபாற்கூலியுள்பட வருஷம் 1-க்கு ரூ 3-8-0. கடன் விகிதம் ரூபா ரூ 4. பழைய கையொப்பக்காரர்கள் குறைந்த விகித சந்தாவை 6-வாரத்துக்குள்ளும், சாதாரண விகித சந்தாவை 3-மாசத்துக்குள்ளும் கட்டாயம் கட்டிவிடவேண்டும். மூன்று மாசம் வரையில் கையொப்பம் செலுத்தாமலிருப்பவர்களிடமிருந்து சேரவேண்டிய கையொப்பத் தொகையை V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும். V. P. P. மூலமாகவின்றி தாமே சீக்கிரத்தில் அனுப்பிவிட விரும்புகிறவர்கள் அது சங்கதியை அந்த மூன்று மாசக் கெடுவுக்குள் எழுதித்தெரிவித்துக்கொள்ளவேண்டும்.

## யானை.

### I.—துணுதிசயங்களும், பிடிக்கும் விதங்களும்.

ஒருவரைக்குறித்து நமக்கு நன்றாகத்தெரியவேண்டுமானால், அவர் ஊர், பெயர், சுற்றத்தார், மதம், ஜாதி முதலியன வெல்லாம் தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிற தல்லவா? சிலரைப் பார்த்தவுடன் அவர்களை இன்ன நாட்டார் என்று சொல்லக்கூடும். வெளுத்த சரீரமுள்ளவர்களைப் பார்த்தால் அவர்கள் வசிக்கும் பிரதேசம் குளிர்ந்ததென்றும், கறுத்த நிறமுள்ளவர்களைக் கண்டவுடன் அவர்கள் நிரக்ஷரேகைக்குச் சமீபத்தில் வசிப்பவர்களென்றும், மாநிறமுள்ளவர்கள் மத்தியப் பிரதேசத்தவர்களென்றும் நாம் எளிதில் அறிகிறோம். அதே மாதிரி தேசத்தில் மிக்க மயிருள்ளவர்களும் சீதப்பிரதேசங்களில் வசிப்பவர்களென்பது ஆராயத் தெரியவரும். சில பூற்பூண்டுகளும், பிராணிகளும் சில பிரதேசங்களுக்கே உரியன. சீதப்பிரதேசத்திலுள்ள செடிகளை நமது நாட்

டில் வைத்து விருத்திசெய்தால், அவைகள் நன்ருக வருவதேயில்லை. வந்தாலும் சுதேசத்திலிருந்ததை விட மாறிப்போகின்றன. பிராணிகள் விஷயத்திலு மப்படியே. ஒரு பிரதேசத்திலேயே சுதேச்சையா ய்த் திரியும் பிராணிகளைப் பிடித்துப் பழக்கினல் எவ் வளவோ மாறிப்போகின்றன. சீதோஷ்ண மாறு பாட்டால் சீவராசிகள் எல்லாம் மாறுபடுவது சித்தம்.

தற்காலத்தில் இந்துதேசத்திலும், சிம்மளத்திலும், ஆபிரிக்கா கண்டத்திலும் நாம் பார்க்கும் யானைகள் பிரகிருதியிலேயே இதே மாதிரியான ரூபத்தோடு இருந்தனவா? இப்போது மாறுபட்டிருக்கின்றன வா? பிருதிவி சாஸ்திரிகள் நான்காம் காலம்* என்று பெயரிட்டிருக்கும் அநேக ஆயிரம் வருஷங் களுக்குமுன்னுள்ள காலத்தில், ஐரோப்பா கண்டத் தில் மேற்குக் கடற்கரை யோரமான சில பிரதேசங் களில் மாம்மத் என்ற ஒரு பிராணி யிருந்ததாம்.



மாம்மத் (Mammoth.)

அதன் உருவத்தைப் பார்த்தவுடனே அது இப்போது நாம் காணும் யானைதானென்று சொல்வதற்குத் தடையேயிராது. கொஞ்சம் உற்றுப் பார்த்தால் இத ற்குச் சுருண்ட தந்தங்களிருப்பதும், கரடிக்கிருப்பது போல உடம்பு முழுதும் நீண்டு அடர்ந்த மயிர்களிரு ப்பதும் காணலாம். இப்போது அந்தப் பிரதேசங் களிலாவது, வேறு எவ்விடத்திலாவது, அம்மாதிரி யான பிராணிகளே கிடையா. அந்த மிருகங்கள் தாம் உஷ்ண தேசங்களுக்கு வந்தமேல் தற்காலத்திய யானைகளாக மாறினவென்று ஊகிக்கிருர்கள். ஆபி ரிக்கா கண்டத்திலிருக்கும் யானைகளுக்கு மிகவும் பெரிய காதுகளிருப்பதும் காலதேசவித்தியாசமா யிருக்கலாம்.

கல்லானை என்று வழங்கும் காண்டாமிருகமும் யானையோடு ஒரு மாதிரி ஒப்புமை கூற அமையும். இதே சாதிக்குச் சேர்ந்த மிருகங்கள் ஏதாவதுளவா வென்று பார்க்கலாம். ஆடு, மாடு, குதிரை, கழுதை, புலி, சிங்கம் முதலிய எல்லாவற்றிற்கும் இதேமாதிரி நான்கு கால்களிருக்கின்றனவே; அவற்றை யேன் இந்தச் சாதியிற் சேர்க்கக்கூடாது? இவையெல்லா வற்றிற்கும் முதுகெலும்பும், விலாவெலும்புகளும், நான்கு கால்களும், இருக்கின்றன. இவைகளுக்கெல் லாம் பொதுவாக மற்றெரு குணமிருக்கின்றது. அதாவது தங்கள் குழந்தைகளுக்குப் பாலூட்டி வள ர்ப்பது. வெளவாலும் இதே குணங்களுடையதால் அதுவும் இதே சாதியிற் சேர்ந்ததுதான். கைகளும் கால்களும் தனியாயில்லாமல் ஒரு தோலினல் மூடப் பட்டிருப்பதுதான் வித்தியாசம். இவையெல்லாம் உற்றுப்பார்த்தால் மனிதனுக்கும் இவற்றிற்கும் வித் தியாசமில்லையென்று தோன்றுவதும் சகஜமே. மனி தனுடைய கைகளிரண்டும் பெருவிரலின் உபயோகத் தால் வஸ்துக்களைப் பிடிக்க உபயோகப்படுகின்றன. விலங்குகளுடைய முன்னங்கால்களோ இம்மாதிரி யான காரியங்களுக்கு உதவா. உபயோகப்படுத்தாத அவயவங்கள் மரத்து உபயோகமற்றுப் போகின் றன. மனிதருக்கிருக்கும் ஐந்து விரல்கள் பன்றிக்கு நான்காகவும், கல்லானைக்கு மூன்ருகவும், ஆடுமாடு களுக்கு இரண்டாகவும் குதிரைக்கு ஒன்ருகவும் மாறியிருப்பதை நாம் காணலாம். யானையடியிலும் நகங்களிருப்பது மனிதன் நகத்தைப்போன்றதே.

இந்தச் சீவராசிகளிலெல்லாம் உயர்ந்ததெதுவெ ன்று பார்த்தால் ஆகாரத்தில் பெரியது யானைதான். அதன் உயரத்தைக் குறித்து ஜனங்கள் கொண்டிருக் கும் எண்ணம் மலைப்புத்தான். சாதாரணமாக அது 13 அடி உயரமிருப்பதாகக்கொள்ளும் எண்ணத்திற்கு ஆதாரமே கிடையாது. தென்னிந்தியாவிலும், பங் காளத்திலும் பிடிபட்ட நூற்றுக்கணக்கான யானை களை யளந்துபார்த்ததில் ஒரே ஒருயானைதான் 9 அடி 10 அங்குலம் உயரமிருந்ததாகவும், நாகூன் தேசத்து மகாராஜாவிடம் 10 அடி $5\frac{1}{2}$ அங்குலமுயரமுள்ள ஒரு யானையிருப்பதாகக் கேட்டிருப்பதாகவும், டக்கா யானை சிகாரியதிபராகிய சாண்டர்சன் என்பவர் சொல்லியிருக்கிருர். சென்னை விநோதசாலையில் வைத்திருக்கும் யானையின் எலும்புக்கூடும் இதே $10\frac{1}{2}$ யடி யுயரமுள்ளது. மனிதர்களில் யாராவது $7\frac{1}{2}$ யடி உயர முள்ளவர்களிருப்பதுபோல் எங்காவது ஒன்று இவ்வளவு உயரமிருக்கின்றது. மிகவும் பெரி யயானை 560 மணுவு கனமுள்ளதென்று கண்க்கிட் டிருக்கிருர்கள். பிறந்தவுடன் யானைக்குட்டி மூன் றடி யுயரமும் 8 மணுவு கனமுமுள்ளதாம். மற்ற மிருகங்களைப்போல யானையின் ஜீவகாலமும் நிர்ணயி

* Quaternary period.

க்கிறது கஷ்டமே. நம்மவர்களனேகருக்கு அது ஆயிரம் வருஷம் ஜீவித்திருப்பதாக ஒரு தப்பு அபிப்பிராயமிருக்கிறது. யானைக்கூட்டங்களோடு பழகினவர்களைக் கேட்டால் அது நூற்றிருபது வருஷங்களுக்கு மேலிருப்பது அபூர்வமென்கிறார்கள். அதன் பல்வலிமையையும் மற்றவைகளையும் உத்தேசித்துப்பார்த்தால் 150-200 வருஷம் ஜீவிக்கலாமாகத் தோற்றுகிறதாம்.



ஆப்பிரிக்கா யானை (African Elephant.)

காட்டானைகளைப்பற்றிய விசேஷ மென்னவென்றால், எவ்வளவு தேடினாலும் தானாகவே இறந்துபோனவற்றின் எலும்புகளே தட்டுப்படுகிறது அபூர்வம். அதனால் சில ஜனங்கள் யானைகள் இறப்பதேயில்லையென்ற ஒரு தவறான எண்ணங்கொண்டிருக்கிறார்கள். சில ஜனங்கள் யானைகள் சாங்காலத்தில் மலைச்சாரலில் எங்கேயோபோய் இறப்பதாகவும் அந்த இடம் மனிதர் அணுகக்கூடாத தென்றும் எண்ணுகிறார்கள். இந்த தேசம் முழுமையும் காடுகளெல்லாம் கொஞ்சமும் பாக்கியில்லாமல் ப்ராஸ்டு இலாகாதார் சுற்றிப்பார்த்திருப்பதால் இந்த எண்ணமும் தவறே. எப்பொழுதாவது காட்டாறுகளைத்தாண்டு வதிலிளைத்து ஒன்று இரண்டு இறந்துபோனவைவற்றின் எலும்புகள் கரைகளில் காணப்படும். முப்பத்தாறு வருஷகாலம் காடுகளிலேயே வசித்து வந்த ஒருவர், தானாக இறந்தயானையின் எலும்பைத் தானும் கண்டதில்லையென்றும், கண்டதாகச் சொல்பவர்களைக் கேட்டதுமில்லையென்றும் சொல்லுகிறார். ஒருவேளை எலும்புகள் காட்டுத்தீயில் எரிந்தாவது, பருவமழையில் அடித்துக்கொண்டாவது போயிருக்கக்கூடுமென்றாலோ, காட்டுத்தீ பெருங்காடுகளில் பிரவேசிப்பதேயில்லை. வெகு வருஷங்களானாலொழிய மழையினால் எலும்புகள் ரூபமற்றுப்போகிறதில்லையென்பதும் நிச்சயமே. எலும்புகள் என்னவாகின்றனவென்பது இன்னும் நன்றாகத் தெரியவில்லை.

யானைக்கூட்டங்களில் சாதாரணமாக 30 முதல் 50 வரை யானைகளிருக்கும். நூற்றுக்குமேற்பட்டிருப்பதும் அதிசயமல்ல. யானைக்கூட்டத்துக்கு பெண்யானைதான் தலைமை. தழையடர்த்தியாயில்லாத இடங்களில் பெரியயானைக் கூட்டங்கள், 10 முதல் 20 வரையுள்ள சிறியகூட்டங்களாகப் பிரிந்துபோகும். ஆனால் ஒரு காட்டிலிருந்து மற்றொரு காட்டுக்குப் போகவேண்டுமானால் எல்லாம் ஒருமிக்கச் சேர்ந்துதான் போகும். இம்மாதிரியான ஒவ்வொரு சிறிய கூட்டமும் ஒரு யானையின் சந்ததியாகவே யிருக்கும்.



இந்திய யானை (Indian Elephant.)

நீண்ட கொம்புள்ள சிரேஷ்டமான ஆண் யானைகள் எப்போதும் ஒரு கூட்டத்துக்குத் தலைமையாக விருக்கிறதேயில்லை. "இனிது இனிது ஏகாந்தமினிது" என்பதுபோலத் தனிமையை விரும்பியோ, அல்லது சூலின் வருத்தத்தாற் றங்களோடு பெண் யானைகள் செல்ல முடியாததனாலோ, களிறுகள் தனியாகவே பயிரடர்ந்த காடுகளில் மேய்வது வழக்கம். பெண் யானைகள் தலைமையா யிருப்பதற்கு நியாயம் எல்லாருக்கும் தெரிந்ததே. "பெற்றவட்கே தெரியுமந்தப் பிள்ளை வருத்தம்." ஆதலால், தங்கள் குட்டிகள் சிரமமடையாதபடி யவைகளுக்குத் தகுந்தபடி ஆகாரம் முதலிய அமைக்கவேண்டியது பெண் யானைகளின் கடமையாதலால் அவைதான் தலைமையாயிருத்தல் நியாயம். நமக்குள்ளும் தற்காலம் பெண்ணரசாளும் தேசம்தான் இவ்வுலகத்திலுள்ள தேசங்களுக்கெல்லாம் முதன்மையானதாகப் பிரகாசிக்கிறது.

யானை கர்ப்பந்தரித்துக் குட்டிபோடுவது நம்மவர்களுக்கு மிகவும் செல்வமானது. அது எப்பொழுது குட்டிபோடும் என்று ஆவலுடன் காத்துக்கொண்டிருப்பதனால் ஒருநாள் ஒரு யுகமாகத் தோன்றுகிறது போலிருக்கிறது. சிலர் கஜகர்ப்பம் 12-வருஷமென்றும் சிலர் மூன்றுவருஷமென்றும் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். வாஸ்தவத்தில் அது நூறு வாரங்களுக்குமேல் கர்ப்பந் தரிப்பதில்லையென்பது ஏற்பட்டிருக்கிறது. எல்லாப் பிராணிகளிலும் அதிகமான காலம் கர்ப்பந் தரித்திருப்பது யானைதான். அது ஒரு குட்டிக்குமேல் போடவே போடாது. மற்றப்

பிராணிகள் கர்ப்பந் தரிக்கும் காலத்தையும், பெறும் குழந்தை குட்டிகளின் சங்கையையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

| பிராணிகளின் பெயர். | | கர்ப்பந்தரிக்கும் காலம். | குட்டிகளின் சங்கை. |
|---|---|---|---|
| ஒட்டகம் | ... | 45 வாரம் | 1 |
| குதிரை | ... | 43 வாரம் | 1 |
| பசு | ... | 41 வாரம் | 1 |
| ஸ்திரீ | ... | 39 வாரம் | 1 |
| மான் | ... | 30 வாரம் | 1 |
| சிங்கம் | ... | 14 வாரம் | 4 அல்லது 5. |
| நாய் | ... | 9 வாரம் | 5 அல்லது 6. |
| முயல் | ... | 4 வாரம் | 3 முதல் 4 வரை. |
| சுண்டெலி | ... | 3 வாரம் | 10 முதல் 15 வரை. |

இதையுற்றுப்பார்த்தால் தேகத்தின் பரிமாணத்திற்குத்தகுந்தபடி கர்ப்பந்தரித்திருக்கும் காலம் அதிகப்படுகிறதென்றும், பெறும் குட்டிகளின் சங்கை குறைகிறதென்றும் நாம் காண்கிறோம். சென்னைப் பட்டணம் துரைத்தன விநோதசாலையில் ஒரு புட்டியில் போட்டுவைத்திருக்கும் கைப்பிடிப் பரிமாணமுள்ள வெள்ளைநிறமுள்ள யானைக்குட்டியைப்பார்த்தால், மிருகங்களெல்லாவற்றிலும் மிகப் பெரிதாகிய யானை தாய்வயிற்றிலிருக்கும்போது இவ்வளவு சிறிதாயிருக்குமாவென்று சந்தேகிக்கச் செய்வதுடன் தொடர்ச்சியாக வேறு சில யோசனைகளையும் உண்டாக்கும். புல் நுனியில் நிற்கும் காலைப்பனித்துளியில் பிரதிபிம்பிக்கும் சூரியனை நாம்பார்த்தால், அண்டபிண்டசராசரங்களுக்கெல்லாம் தன்னொளிபரப்பி யுய்விக்கும் சூரியனும் இத்துளியிலடங்கி யிருப்பானோ என்று சிந்திக்கவும், உலகத்திற்கு எவ்வளவோ நன்மைகள் செய்து புகழ்பெற்ற மகான்களும் ஒரு காலத்தில் சிறுமையடைந்து மிருக்கலாமென்றும் உடலின் சிறுமைகண்டொள்ளாமை வேண்டுமென்றும் பல நீதிகள் புகட்டுகின்றதல்லவா? பன்றியும் நாயும் பலகுட்டி பயந்ததினாலென்ன, ஓங்கு கரிக் கன்றோ ஒன்றமையவேண்டும்.

யானைக்குட்டி பிறந்ததுமுதல் 5, 6 மாசம் வரைபால் சாப்பிட்டே சீவிக்கின்றது. அதன் பிறகுதான் மெள்ள மெள்ள இளம் புற்களைத் தின்னப்பழகுகின்றது. ஆயினும் அநேக நாள் வரையிலும் பால்தான் முக்கியமான ஆகாரம். யானைகளுக்குத் தங்கள் குட்டிகளின்மேல் பக்ஷம் கொஞ்சம் குறைவுதான். பூனையைப்போல வாயிற் கௌவிக்கொண்டு போகும்படிக்கும், ஆஸ்திரேலியாவிலுள்ள காங்காரூவைப்போலத் தன் வயிற்றிலுள்ள பையிற்போட்டுக்கொண்டு போகும்படிக்கும், தாய்க்கு அவ்வளவு அன்புகிடையாது. தங்கள் சொந்தக் குட்டிகளுக்கே அப்படியிருக்கும்போது, அயல்யானைகளின் குட்டிகளையா மற்றென்று ஆதரிக்கும்? வேட்டையாடுவதில் தங்கள் தாய்கள் பிடிபட்டுப்போனதில், புகலிடமின்றி அபயமடைந்த யானைக்குட்டிகளை மற்றவைகள் துரத்தி யடிப்பது சாதாரணமாகக்காணலாம். வெகு நாளாக யானை சிகாரியில் சம்பந்தப்பட்ட ஒருவர், தான் ஒரே ஒரு யானைதான் அயற்குட்டியை யாதரித்ததைப்பார்த்ததாகச்சொல்லியிருக்கிறார். ஒருயானை குட்டிபோட்டால், அதைச்சேர்ந்தயானைக்கூட்டம் அந்த இடத்தைவிட்டு இரண்டுநாள் நகருவதில்லை. அதற்கப்புறம்தான் அந்தக்குட்டிக்கு நடக்கமுடியும். (உலகத்தையெல்லாம் தன் புத்திவலிமையினாலடக்கும் மனிதனுக்கு மாத்திரம் மாதக்கணக்காகும்படி யேன் கடவுளமைத்தனரோ!) அப்புறம் அந்தக் குட்டிகள் தங்கள் தாயினுதவியால்கூட்டத்தோடு மலையேறவும், ஆறுகளைத் தாண்டவும் இயலும். நீந்தும்காலத்தில், குட்டிகள் வெகு இளமைப் பருவமானால், தாய் தன் தும்பிக்கையால் பிடித்துக்கொண்டுபோகும். சாதாரணமாக யானை, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை மாதங்களில்தான் குட்டிபோடும்.

மனிதனுக்கு 18-வயதில் தேகம் எவ்வளவு விருத்தியடைந்திருக்கிறதோ அதற்குச் சமதியான விருத்தியடையவேண்டுமானால் யானைக்கு 25-வயதாக வேண்டும். அதற்கு பூரண யௌவனம் 35-ம் வயதில். பெண் யானைகள் 13-வயது முதல் 16-வயதுக்கு மேற்பட்டு குட்டிபோட ஆரம்பிக்கும். நீண்ட கொம்புகள் ஆண் யானைகளுக்குத்தான் உண்டு. பெண் யானைகளுடைய தந்தங்கள் 4 அங்குல நீளத்திற்கு அதிகமாக இருக்கவேயிராது. இந்தியாவில் கொம்பில்லாத ஆண் யானை வெகு அபூர்வம். அந்த யானைகளுக்கு "மக்னா" என்று பெயர். ஆனால், சிங்களத்திலுள்ள ஆண் யானைகளுக்குக் கொம்பு இருப்பது அபூர்வம். யானைகள் காடுகளில் நேரிடும் சில துன்பங்களினால் ஒருவேளை இரண்டு கொம்புகளையும் இழப்பதும், சாதாரணமாக ஒரு கொம்பை யிழப்பதும் உண்டு. பின்னவற்றிற்கு ஒரு கொம்புடைய ஐங்கரன் பெயரையிட்டு "கணேசன்" என்றழைப்பதுண்டு. பாம்புக்குத் தோலுரிந்தால் மறுபடி வளருவதுபோலவும், நமக்குக் கொஞ்சம் வயதுவரைக்கும் பல்விழுந்தால் மறுபடியும் முளைப்பதுபோலவும், கலைமானின் கொம்பு கழன்று போவதுபோலவுமின்றி, யானையின் கொம்பு ஒருதரம் விழுந்தால் அது மறுபடியும் முளைக்கவே முளைக்காது.

யானைகள் எந்த ஜந்துவுக்கும் யாதொரு துன்பமும் செய்கிறதேயில்லை. எப்போதும் ஒருவர் கண்ணுக்கும் தென்படாமலே வாழும். காடுகளில் திரிந்துகொண்டிருக்கும்போது அவைகளைப்போலப் பயங்கொள்ளிகள் கிடையவேகிடையா. மனிதர்களைக்கண்டால் உடனே விலகிப்போய்விடும். யானைகள் சூரியோதயத்திற்கு மேலும் அஸ்தமனத்திற்கு முன்னும் தான் ஜலம்குடிக்கும். தாங்கள் திரியும் காடுகளிலுள்ள காட்டாறுகளின் ஜலத்தைப்பார்க்கிலும், அருவி, சிற்றாறு இவைகளின் ஜலத்தின்பேரில்தான் அவைகளுக்குப் பிரியமதிகம். மிகுந்த கோடையிலன்றி மற்ற எக்காலத்திலும் பொழுது விழுந்த மேல் அவைகள் நீராடுவதில்லை. யானைகள் நீராடுவதைப்பார்க்க வெகு விநோதமாயிருக்கும். ஜலத்திலிறங்கினால் சாமானியத்தில் மேலேறாது. ஜலத்தில் கூட்டம் கூட்டமாகத்தான் இறங்கும். ஜலத்தைத் தும்பிக்கையால் வாரி வாரி ஒன்றின்மேலொன்று இரைத்துக்கொண்டு விளையாடும். தமிழ்க்கவிகளுக்கு இப்படிப்பட்ட கட்டம் வந்துவிட்டால் வரணனைக்குப் பஞ்சமேகிடையாது. ஸ்ரீராமர் பம்பைத்தடாகத்தில் நீராடியதைச் சொல்லும் பாடல்களே கம்பர்பெயரை அழியாமல் நிலைநிறுத்தப்போதாவா ?

"மீன்குஞ்சுக்கு நீந்தக் கற்றுக்கொடுக்கவேண்டுமா?" என்பது சகஜம். யானைக்குட்டிகளும் நீந்துவதில் பின்னிடா. கங்காநதியில் விடப்பட்ட யானைகள் 6 மணிகாலம் நிலத்தைத் தேடாமலே நீந்துகின்றனவாம்.

குதிரைகளுக்கு எத்தனையோவிதமான நடைகள் கற்றுக்கொடுக்கிறோமே, அந்தமாதிரி யானைக்கும் கற்றுக்கொடுக்கலாமென்றால் முடியாது. இதற்கெல்லாம் தேகலாகவம் வேண்டும். யானை திரும்பிப்பார்க்க வேண்டுமென்றால் தேகமுழுவதையும் திருப்பிப் பார்த்தால் பார்க்கலாமேயல்லாது கழுத்தைத் திருப்பவே முடியாது. இவ்வளவு பெருத்த காத்திரமுள்ள யானைக்கு சாதாரண நடையைத்தவிர வேறு யாது கற்பிக்க இயலும்? ஆனால் நடைமாத்திரம் கொஞ்சதூரம் போகவேண்டுமானால் ஒரு மணிநேரத்துக்கு சுமார் 15 மைல் வீதம் நடக்கச் செய்யலாம். கொஞ்சதூரமானாலும், உயரவேனும், நீளவேனும், யானைக்கு எழும்பித்தாண்டமுடியாது. அதற்குமுன் 8 அடி அகலம் 8 அடி யாழமுள்ள பள்ளமிருந்தால் அதுதாண்டவே முடியாது.

சாதாரணமாக யானையின் நிறம் பழுப்பு நிறம். அதன் தோலைத் தென்னங்கதம்பையைக்கொண்டு தேய்த்து எண்ணெய் பூசுவதினாலது கறுப்பு நிறமாக மாறுகின்றது. மனிதர்களில் சிலருக்கு வெளிச்சத்தைக் கண்டால் கண் கூசுகிறவர்களிருக்கிறார்களல்லவா? சிலருடைய தேகம் இன்ன நிறமுள்ளதென்று சொல்ல முடியாமலு மிருக்கிறதையும் கண்டிருக்கிறோம். இதற்குக் காரணம் என்னவென்றால், சாதாரணமாக எல்லா மனிதர்களுக்கு மிருக்கிறபடியிவர்களுக்கு தேகத்தில் வர்ணத்தகடு இல்லாததுதான். மேல்தோலுக்கும் இரத்தத்தோடு சேர்ந்த உள்தோலுக்கும் நடுவில் ஒருவிதமான வர்ணத்தகடு இருப்பதினால்தான், ஒருவனுடைய நிறம் வெள்ளை, மஞ்சள், சிகப்பு என்று சொல்லக்கூடுகிறது. விளக்கின் ஒளியானது மறைக்கும் கண்ணாடியின் நிறத்தை எப்படிப் பெறுகிறதோ அதே மாதிரிதான். இந்த வர்ணத்தகடே யில்லாமற்போனால் ஒருவித வர்ணமுமிராது. இந்த மாதிரியான வர்ணத்தகடு இல்லாத யானைகள் பார்ப்பதற்குக் கொஞ்சம் வெள்ளை நிறமாக விருக்கும். இதைத்தான் இந்த நாட்டார் வெள்ளை யானையென்று சொல்லுகிற வழக்கம். நன்றாக இவ்விஷயத்தை யுற்றுப்பார்த்து அறிந்திருப்பவர்கள் வெள்ளை யானைகளே கிடையா என்று சொல்லுகிறார்கள்.

தென்னாட்டில் மைசூரைச்சேர்ந்த பிளிகிரங்கன் மலைகளிலும், கோயமுத்தூரைச்சேர்ந்த பிருகூர்மலை, யானைமலை முதலிய இடங்களிலும் யானைகள் இன்னும் வசிக்கின்றன. யானை செத்தாலும் ஆயிரம் பொன் என்று சொல்வது வழக்கம். தற்காலத்தில் யானைகளின் விலையானது, 20 வருஷத்திற்கு முன்னிருந்ததைவிட இரட்டித்தும், 40-வருஷங்களுக்கு முன்னிருந்ததைவிட எண்மடங்காகியும் இருக்கிறதாம். இப்பொழுது ஒரு சாமானியமான யானையின் விலை 2,000 ரூபாய்க்குக் குறைகிறதில்லையாம்.

யானையைப் பார்த்துவிட்டுப் பக்கத்தில் அதையடக்கிக்கொண்டு நிற்கும் பாகனையும் பார்த்தால், சைவ சமயாசாரியர் சொல்லிய "நானெங்கே முத்தி நெறியெங்கே" என்ற சொல் நினைப்பு வருகின்றது. மனிதனுடைய பலத்திற்கும், யானையின் பலத்திற்கும் அஜகஜாந்திர மல்லவா? சகல வேதவேதாந்த சாராம்சத்தையும் எட்டுணையும் குற்றமின்றி ஈரடிக்குறளில் அமைத்துப் பாடிய நாயனார் மகிமையைப்போல, மிருகங்களுக்கெல்லாம் பெரிதாகிய யானையை மனிதன் தன் புத்திவலிமையினால் அடக்கிவிடுகிறானே! புத்திக்கெல்லாம் காரணபூதமென்னவோ, அந்த இந்திரியமானது, காத்திரம் பெரிதாகப் பெரிதாக அதிகமாகத்தானே யிருக்கவேண்டும். ஆதலால் யானையெல்லாவற்றிலும் மிகுந்த புத்திகூர்மையுள்ளதாக வல்

லவோ இருக்கவேண்டுமென்று சந்தேகிக்கலாம். புத்திக்கு ஆசயம் மூளையென்பது எல்லோருக்குந் தெரியுமே. அந்த மூளையானது தலையில் கபாலத்திற்குள் மூடப்பட்டிருக்கிறது. மனிதனுக்கு தலையில் முன்பாகமும், அடிப்பாகமும், முகமும், மேல்பக்கமும், பின்பக்கமும், மூளையுமிருக்கின்றன. தலையின் இடத்தில் மிகுதியான பாகம் மூளையும், குறைந்தபாகம் முகமுமாக மனிதன் அவயவம் அமைந்திருக்கிறது. விலங்குகளுக்கோ அப்படியில்லை. முகம் கொள்ளும் இடத்தையும், மூளைகொள்ளும் இடத்தையும் ஒப்பிட்டால், மூளையிருக்கும் பாகம் அளவிற் குறைந்திருக்கும். மனிதனுக்கு அடுத்தபடி வானரச்சாதியும் பின், நாய், நரி முதலியவும் வருகின்றன. மூளையை யுற்றுப் பார்த்தால் ஒரு மனிதனுக்கு இருக்கிற மாதிரி மற்றவனுக்கிருப்பதில்லை. குரங்கின் மூளைக்கும் மனிதன் மூளைக்கும் அதிக வித்தியாச மிருக்கிறது. பொதுவான ரூபத்தில் மிகவித்தியாச மில்லாவிட்டாலும், அம்மூளையின் கோணல்களில் வித்தியாசம் அதிகமுண்டு. கோணங்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாயிருக்கின்றனவோ அவ்வளவுக் கவ்வளவு புத்தியதிகமென்பது கபால லக்ஷண சாஸ்திரிகளின் கொள்கை. ஆகவே யிவ்விதத்திலெல்லாம் யானையானது மனிதனுக்குத் தாழ்ந்ததால், அவன் செய்யும் உபாயங்களிலிருந்து தப்பமுடியாமல் அவன் ஆக்ஞைக்குட்படுகிறது. யானைகளைப் பிடித்து வசப்படுத்துவதற்கு மனிதன் ஏற்படுத்தியிருக்கும் உபாயங்கள் என்னவென்று பார்ப்போம்.

யானைகள் ஆசியா ஆபிரிக்கா இந்த இரண்டு கண்டங்களில்தா னிருக்கின்றனவென்று முன் சொன்னோம். ஆபிரிக்கா யானையை அத்தேசத்தார் உபயோகிக்கப் பாடுபடுகிறதில்லை. ஆதலால் யானையைப் பிடிக்கும் விதம் அங்கே சிறந்ததல்ல. இந்தியாவிலும் இலங்கையிலும் யானைக ளதிகமா யிருப்பதுடன் அவைகளைப் பண்டைக்காலத் தரசர்கள் இராணுவத்தில் ஒரு பகுதியாகவைத்து வந்தமையாலும் தற்காலத்திய அரசர்கள் பளுவான துப்பாக்கிகளை யிழுப்பதற்காக உபயோகித்து வருவதாலும் அதைப் பிடிக்கும் விதம் இந்துதேசத்தில் நன்றாய் விருத்தியடைந்திருக்கிறது. காட்டிலிருந்து யானைகளைப் பிடிக்கும் வழிகளாவன :—

தனி யானைகளைப் பிடிப்பதற்கு :—(1) படுகுழியில் வீழ்த்துவது (2) பழகின யானையின்மே லுட்கார்ந்துகொண்டு துரத்திக்கொண்டுபோய்ச் சுருக்குப்போடுவது (3) யானைகளைப் பிடிப்பதற்காகவே பழக்கிவைத்திருக்கும் பெண் யானைகளின் உதவியால் அதற்கடியில் மறைந்துகொண்டு மற்ற யானையின் கால்களில் தளைபூட்டுவது.

கூட்டமான யானைகளைப் பிடிக்கவேண்டுமானால் (1) ஒரு உப்பங்கழி அல்லது சாட்டுக்குட்டை ஒன்றைச்சுற்றிக் கோல்நட்டு வளைத்து வாசலில் ஆள்களைக் காவல் வைத்திருந்து ஒரு கூட்டம் அதற்குள் போயிருக்கும் சமயம் பார்த்து வழியை மூடிவிடுவது. ஆனால் இது யானைகள்வரும் சமயத்தைப் பார்த்துக்கொண்டிருக்கவேண்டியதினாலும் கூட்டத்தைக்கண்டபோது பிடிக்க இயலாததாலும் இது சவுகரியமானதல்லவென்று மற்றொரு விதத்தைத் துரைத்தனத்தார் கையாண்டு வருகிறார்கள். (2) யானைக் கூட்டத்தையெங்கே கண்டாலும் அங்கே ஜனங்கள் சுற்றிவளைத்துக்கொண்டு இதற்கென்றேற்படுத்தியிருக்கும் கொப்பத்தில் ஒட்டி மூடுவது.

படுகுழி யென்பது வெகுநாளாக ஏற்பட்டிருக்கும் ஒரு முரட்டுவழி, 15 அல்லது 18 அடி ஆழம் குழியை வெட்டி அதன்மேல் கோல்களையும் கொம்புகளையும் போட்டு மூடிப் பயிரிட்டு வைத்திருந்தால் அங்கே குழியிருக்கிறதென்றுகூட சந்தேகிக்காமல் பயிரைத் தின்னவந்து திடீரென்று குழியில் விழுந்தால், யானைகள் பருத்த காத்திரமுள்ளவையாதலால் அனேகமாய் மாண்டுபோகின்றன. தவறினாலும் நிரந்தரமான காயம்படுகிற தென்பதற்குச் சந்தேகமேயில்லை. அப்படி காயம்பட்டு யானை கிடக்கிறதென்று தெரிந்தால் சுதேசிகள் யானையை மீட்க வழிதேடாமல் மடியவிட்டுப்போகிறார்கள். அம்மாதிரி ஒரு குழியில் ஒருமிக்க நான்கு யானைகள் விழுந்து அவற்றுள் ஒன்றுதான் உயிரோடு மேலேறினது தனக்குத் தெரியுமென்று சாண்டர்சன் துரையவர்கள் சொல்லுகிறார். சிகாரிகள் படுகுழிகள் ஏற்படுத்துவதில் மிகவும் புத்தி சாதுரியமுள்ளவர்கள். இரண்டு குழிகள் வெட்டுவித்து ஒன்றை மூடி மற்றொன்றைத் திறந்துவைக்கிறதுண்டு. அதனால் யானை திறந்திருக்கும் படுகுழியைக்கண்டு விலகினால் பக்கத்தில் மூடியிருக்கும் படுகுழியில் விழுந்துவிடுகிறது. மற்றொன்று, பக்கம் பக்கமாக அனேக குழிகள் வெட்டி வைத்திருப்பது. தங்கள் கூட்டத்தில் ஒரு யானை விழுவதைக்கண்டு பயந்து மற்றவைகள் ஓடும்போது அவைகளும் பக்கத்திலுள்ள குழிகளில் விழும். ஆனால் சிகாரிகள் அடிக்கடிபோய்க் குழிகளைப்பாராததினால் குழிகளில் விழும் யானைகள் அனேகம் ஆகாரமின்றியே மடிய நேரிடுகிறது.

உப்பங்கழி அல்லது குட்டைகளை வளைத்துப்பிடிப்பதும் இதே அபாயத்தை யுடையது. ஒரு பெரிய

யானைக்கூட்டம் அகப்பட்டால் அவைகளை வசப்படுத்த பழகின யானைகள் வேண்டிய அளவு இருக்கிறதில்லை. அனேக காலங்களில் இப்படி நேரிடும் தாமதத்தினுல் அனேக யானைகள் இறந்துபோகின்றன.

யானைகளைத் துரத்திக்கொண்டுபோய் சுருக்குப் போட்டுப் பிடிப்பது மிகவும் அபாயகரமானதானுலும் வேட்டை யாடுபவர்களுக்கு வெகு சுவாரசியமாயிருக்கும். 3, 4, பழகின யானைகளுக்கு உடம்பில் ஒவ்வொரு கயிற்றைக்கட்டி மற்ற நுனியில் சுருக்குப் போட்டு ஒருவன் பிடித்துக்கொண்டு, யானைக்கூட்டத்தில் பிரவேசிப்பார்கள். அவைகள் பயப்பட்டு ஓடும்போது இந்த மூன்று நான்கு யானைகளும் ஒரு யானையையடுத்து கூடஓடும். அப்போது எல்லாரும் அந்த யானையின் கழுத்தில் சுருக்கை வீசுவார்கள். காட்டு யானை யிழுத்துக்கொண்டு ஓடும்போது பழகின யானைகளுக்கும், பாகனுக்கும் கெடுதல் சம்பவிப்பது அதிசயமல்ல. பழகின யானைகளுக்கு விருதா சிரமம் அதிகமாவதால் இது அவ்வளவு லாபகரமான வழியல்ல. இலங்கைத் தீவில் சிலர் நடந்து சென்றே ஓடும் யானையின் பின்னங்கால்களுக்குச் சுருக்கிட்டு மரத்தில் கட்டிவிடுகிறுர்களாம். பெரிய ஆண் யானைகள் கூட்டத்தோடு சேராமல் தனியே உலாவுவதனுல் மேற்குறித்த உபாயங்களினுல் பிடிக்க இயலாது. மிகவும் உபயோகமுள்ளவையாதலால் அவைகளைப் பிடிப்பதற்கு 4, 5 பழகின பெண் யானைகளில் கருங்கம்பளி போர்த்து பாகர்கள் ஒளிந்து சென்று இவைகளையும் ஆண் யானையோடு மேயவிடுவார்கள். இப்படி இரண்டு இரவும் பகலும் சென்ற பிறகு, ஆண் யானை சூரியோதயத்தில் தூங்க ஆரம்பிக்கும் தருணம் பார்த்து இரண்டு யானைப் பாகர்கள் கீழே இறங்கி அதன் பின்னங்கால்களைச் சேர்த்து பக்கத்திலுள்ள மரத்தில் கட்டிவிடுவார்கள்.

தரைத்தனத்தார் கையாண்டுவரும் கொப்பம் எனனும் ஏற்பாடு மிகவும் செலவுபிடிக்கிறதாயினும், மொத்தத்தில் லாபகரமும் சவுக்கியமுமுள்ளது. இதற்கு 370 ஜனங்கள்வேண்டும். யானைக்காடுகளுக்குப் பக்கத்தில் 100, 150 பழகின யானைகளையும், ஆயுதங்களையும், சாப்பாடும் சேகரித்து வைத்துவிட்டு இவர்கள் யானைக்கூட்டம் இருக்கும் இடம் தேடிப் போவார்கள். அதற்கு ஒரு மயில் தூரத்திற்கிப்புறமே அவர்கள் பிரிந்து கூட்டத்தை வளைத்துக்கொள்ள ஆரம்பிப்பார்கள். இந்த ஜனங்களில் இரண்டு தலைவர்கள் வழிகாட்ட சிலர் ஒருபக்கமாகவும் மற்றையோர் இன்னொரு பக்கமாகவும் பிரிந்து ஒருவட்டமாகக்கூடி கூட்டத்தை வளைத்துக்கொள்ளுவார்கள். இந்த வட்டத்தில் ஒரு மனிதனும் மற்றவனுக்கும் நடுவில் இடைவெளி 30 முதல் 50 அடிவரையிருக்கும். இப்படி வளைத்துக்கொள்வதற்கு 3, 4 மணிநேரம் பிடிக்கும். உடனே ஒருமணி நேரத்திற்குள்ளெல்லாம் சிறு மூங்கிற் பிளவுகளைக்கொண்டு ஒரு வேலி கட்டுவார்கள். சாதாரணமாக ஒரு வாரமும், அபூர்வமாக ஒரு மாதமும் இப்படி வளைத்துக்கொண்டிருக்க வேண்டும்.

முதல் இரண்டு இரவுகளிலும் சூழப்பட்ட யானைகள் மிகத்தொந்தரவு செய்யும். பிறகு அடங்கிவிடும். சூழப்பட்ட மறுநாளே கொப்பங்கட்ட ஆரம்பிப்பார்கள். 60 முதல் 150 அடிவரை சுற்றளவுள்ளதாக ஒரு வட்டம் சிறு மரங்களை நட்டு ஏற்படுத்துவார்கள். இச்சிறு மரங்கள் 12 அடி நீளமும் 6 அங்குல கனமுமுள்ளதாயிருக்கும். இவைகளை நட்டபிறகு உட்பக்கமாக 4 அடி அகலம் 4 அடி ஆழமுள்ள அகழ் ஒன்று வெட்டி வைப்பார்கள். அகழிலிருந்து எடுத்த மண்ணையும் உட்பக்கமாகக் குவிப்பார்கள். இப்படி செய்வதனுல் அடைபட்ட யானைகள் கொப்பத்தைச் சூழ நடப்பட்டிருக்கும் மரங்களைத் தகர்க்கமுடியாது. மேலும் மரங்கள் நடுவதிலும் ஒருவிதமுண்டு. அவைகளுக்கு வெளிப்பக்கத்தில் அள்ளைக்கால்கள் கொடுத்திருப்பதனுல் உள்ளிருந்து முட்டினுல் தகர்க்கமுடியாது. வெளியிலிருந்து உந்தினுல் வெகு சீக்கிரத்தில்விழும். இக்கொப்பம் ஜனங்கள் சூழ்ந்திருக்கும் வட்டத்திற்குள்ளேயே ஒருபக்கம் கட்டப்படும். இதெல்லாம் முடிந்தபிறகு சூழ்ந்திருக்கும் ஜனங்கள் கொஞ்சம் கொஞ்சமாக நெருங்குவார்கள். கொப்பத்திற்கு 8 முழ அகலமுள்ள வழிவிடப்பட்டிருக்கும். இந்த வாசலிலிருந்து வரவர விசாலமாக 100 கஜதூரம் வரைக்கும் இருபக்கமும் கோல்கள் நட்டு வழிகாட்டியிருக்கும். ஆகவே துரத்தப்பட்ட யானைகள் இதற்குள் புகுகின்றன. உடனே ஒரு கதவு போட்டு வழியை யடைத்துவிடுகிறுர்கள். இந்தக் கதவுக் குள்பக்கமெல்லாம் நிறைய வசிகள் வைத்திருக்கும். மறுநாள் 10, 12 பழகின யானைகளில் ஒவ்வொன்றிலும் ஒரு பாகனும் ஒரு சுருக்குப்போடுபவனும் உட்கார்ந்துகொண்டு உள்ளே போவார்கள். பிறகு ஒவ்வொரு காட்டுயானையாகப் பிரித்து தூர இழுத்துக்கொண்டுபோய் அதன் காலில் தளைபூட்டி கொப்பத்திலிருந்து வெளியே கொண்டுபோய்ப் பக்கத்திலுள்ள காடுகளில் இரண்டு மரங்களுக்கு நடுவில் கட்டிவைப்பார்கள். எவ்வளவு பழகின யானைகள் கையிருப்பு இருக்கின்றவோ அதைப் பொறுத்துத்

தான் காட்டுயானைகள் பழக்கவேண்டும். இரண்டு பழகின யானைகளிருந்தால் மூன்று காட்டானைகள் தான் பிடிக்கலாம். எல்லா யானைகளையும் இப்படி பிடித்தபிறகு காட்டிலேயே வைத்திருந்தால் திமிரி ஓடிப்போமென்று நாட்டிற்குள் கொண்டுவந்து விடுவார்கள்.

பா. பாலசுப்பிரமணியம், பி. ஏ.

---

## விஜயநகரம்.

### I.

நாம் கொஞ்சநாளைக்குமுன் மகாபலிபுரத்தைப் பற்றி இந்தப் பத்திரிகையில் எழுதினோம். அந்த ஊருக்கு அடுத்தபடியாக நமது தென்னிந்தியாவில் பழைமையான கட்டிடங்களும் கோவில்களும் சிற்பவேலையிற் பெயர்போன சிலைகளும் எவ்விடம் காணலாம் என்றால் பல்லாரிஜில்லாவில் துங்கபத்திராக்கரையில் இப்போது மகாபலிபுரம்போல் பாழாய்ப்போயிருக்கும் விஜயநகரம் என்ற ஊருக்குப்போய்த்தான் கண்டுகொள்ளவேண்டும். மகாபலிபுரம் என்னும் இடத்தில் தற்காலத்தில் ஒரு சிறு ஊராவதிருக்கிறது. விஜயநகரமோ நமது பிரதான நகரமாகிய சென்னைபோல் வெகு விசித்திரமாயும் விஸ்தாரமாயும் ஒருகாலத்திலிருந்து பிறகு பாழாய்ப்போனவிடமாயிருக்கிறது. அங்கு இப்போது ஒன்றுங்கிடையாது, நாய் நரிகளும் சிருத்தை புலிகளுந்தான் அங்கு வசிக்கின்றன. பெருங்காடாயிருக்கிறது. ஊரோ அங்கு ஒன்றுங்கிடையாது. ஸமீபத்திலிருக்கிற ஹம்பி என்ற கிராமத்திலிருந்துகொண்டுதான் விஜயநகரம் என்று பெயர் வழங்குமிந்த யதார்த்தமான பாழும் ஊரை நாம் பார்க்கவேண்டும்.

இந்த ஊரானது பல்லாரியிலிருந்து சற்றேறக்குறைய 32 மையில்தூரத்தில் பல்லாரிக்கு வடமேற்கு மூலையிலிருக்கிறது. கொஞ்சநாளைக்குமுன் விஜயநகரத்திற்குப் போகவேண்டுமென்றால் பல்லாரி போய் அங்கிருந்து கட்டைவண்டியில் போகவேண்டும். இப்பொழுதோ அப்படியல்ல: விஜயநகரம் போவது வெகு சுலபம்: ஹொஸ்பேட்டை என்னும் ஊர் வரையில் ரயில் போகிறது, அப்புரம் 6-மயில்தானங்கிருந்து விஜயநகரம்.

முதல் முதலில் விஜயநகரத்தைப் பார்ப்பவனுக்கு இப்படியுமொரு ஊர் ஒருகாலத்திலிருந்திருக்குமா என்று தோன்றும். நாலு பக்கமும் பொட்டல்களான பர்வதங்களும், காடு மொரடுகளும், எங்கு பார்த்தாலும் அடிவாரத்தில் கொத்துக் காடுகளும் சப்பாத்திகளும் பார்க்கிறவன் மனதை அச்சப்படுத்தும். பாழாய்ப்போயிருக்குமிந்த ஊர் நடுமெத்தியில் துங்கபத்ராநதி ஓடிக்கொண்டிருக்கிறது. கரையோரமாகப்போய்ப்பார்த்தால் எருமைக்குட்டி எருமைக்குட்டியாய் 1000 முதலைக் குட்டிகள் கரையோரம் படுத்திருக்கும். ஆளைக்கண்டதும் பொத் பொத் என்று எல்லாம் தண்ணீரில் குதித்துவிடும். வெகு பயங்கரமான காட்சி. சுற்றி சப்பாத்திக்காடு, நீரில் முதலை, ஒத்தையடிப்பாதை தப்பினாலோ பாம்போ, புலியோ என்று நடுங்கவேண்டும். இந்த இரண்டுவித ஜந்துக்களுக்கும் யாதொரு குறைவுமில்லை. இந்த வனத்திலும் மலைச்சருகிலுந்தான் பழயகாலத்தில் விஜயநகரம் என்ற பட்டணம் கட்டப்பட்டிருந்தது. அந்தக் காலத்திலிருந்த தெருக்களும் கடைகண்ணிகளும் கோவில்களும் மண்டபங்களும் இப்போதும் பாழாய்ப்போயிருப்பதை நாம் இன்றைக்கும் காணலாம். இந்த ஊரை எந்த ராஜாக்கள் கட்டினார்கள்; போயும்போயும் எவ்வளவோ இடங்களிருக்க இந்தக் காட்டிலும் கள்ளியிலும் குன்றிலும் மலையிலுந்தானா ஒரு பட்டணத்தைக் கட்டவேண்டும் என்ற சங்கை பிறக்கலாம். இம்மாதிரி கட்டினதிற்கு அநேகவித காரணங்களுண்டு. முதலாவது நாம் இப்பொழுது பார்க்கும் அந்த ஊர் பாழாயிருப்பதினால் நமக்கு பயத்தை உண்டாக்குகிறதேயன்றி செவ்வையாயிருந்த அந்தக் காலத்தில் எவ்வளவு நன்றாயிருந்திருக்குமோ அதை நாம் எப்படிச் சொல்லமுடியும். இப்போது பாழாய்க் கிடக்கும் சிற்பவேலை இன்னும்பார்க்கிறவர்களுடைய அவாவைத் தணிக்கவில்லையே. அவ்வளவு புத்திதிறமையுள்ள அக்காலத்துப் பெரியோர்கள் வேண்டுமென்று ஒரு கெட்ட இடத்திலேயா ஒரு ஊரைக் கட்டியிருப்பார்கள். அல்லவே அல்ல. ஜலஸௌக்யம் மலைநாடு முதலியவைகளை யோசித்து நல்ல இடமாகவே எண்ணி ஆராய்ந்து பார்த்துக் கட்டியிருக்கவேண்டும். அக்காலத்தி லப்படியே யிருந்திருக்கக்கூடும். அப்புறம் யாதுகாரணத்தாலோ அந்த ஊரைவிட்டு ஜனங்கள் போய்விடவே அது பாழாய்ப்போய்விட்டது.

இவைகளில்லாமல், விஜயநகரம் அப்படி காட்டிலும் மலையிலும் துங்கபத்ரைக் கரையிலு மமைக்கப்பட்டதற்கு ஜனங்கள் இன்னுமொரு முக்கியகாரணம் சொல்லுகிறார்கள். அதுதான் நிஜமான காரணமாகத் தோன்றுகிறது. ராஜநீதிக் கண்ணால் செம்மையாய்ப் பார்க்கும் பக்ஷத்தில் அந்த ஊர் அமைக்கப்பட்டிருக்கும் ஸ்தானமானது அந்த ஊர் அரசர்களுக்கு

ஆயிரம் யானை பலத்தைக் கொடுக்கப்பட்ட ஸ்தலமாகக் காணப்படுகிறது. பட்டணத்தைச்சுற்றி அடர்ந்த மலைகளும் காடுகளுமுண்டு. ஒரு வழியாய்த்தான் ஊருக்குள் சத்துருக்கள் வரவேண்டும். அந்த வழியில் கொஞ்ச மாட்களை வைத்துக்கொண்டு நின்றால் ஒரு மூலபல சேனையையும் தைரியமாய்த் தாக்கி தோற்கச்செய்யலாம். இதை உத்தேசித்தே அக்காலத்து அரசர்கள் விஜயநகரத்தைத் தங்கள் பிரதான நகரமாக வைத்திருக்கவேண்டுமென்று எண்ணவேண்டியதாக விருக்கிறது. நல்லது இந்தப் பட்டணத்தை யார் கட்டினார்கள். எந்த வம்சத்தரசர்களிங்கு ஆண்டு வந்தார்கள். இவைகளைப்பற்றி சற்று விசாரிப்போம். இந்த தேசத்தில் அரசாண்ட ராஜவம்சத்து மன்னர்களை விஜயநகர வம்சத்தார் என்று சரித்திரங்களில் கூறுவது வழக்கம். இந்த வம்சத்தரசர்கள் முதல் முதலில் 14-வது நூற்றுண்டின் மத்யகாலத்திலிருந்து அரசாண்டதாக நாம் கேள்விப்படுகிறோம். பாழாய்க் கிடக்கும் இந்த ஊருக்குச்சமீபத்தில் **ஹம்பி** என்று ஒருகிராமமிருப்பதாகச் சொல்லியிருக்கிறோமே—அதுதான் ராமாயணத்தில் **பம்பை** என்று வருணிக்கப்பட்டிருக்கும் பரதேசம்: வெகுவிசித்திரமாய் வால்மீகி மகாரிஷியால் சொல்லப்பட்டிருக்கிற பம்பா ஸரஸ் என்ற குளமுமிங்குதானிருக்கிறது. இப்போதும் எவ்வளவு பாழடைந்த ஸ்திதியிலிந்தக் குளமிருந்தபோதிலும் நமது தென் தேசத்தில் அழகிலும் காத்திரத்திலும் முதல்தரமான தாமரை புஷ்பமிந்த பம்பா ஸரவில் தான் உண்டாகிறது. இந்த ஹம்பி என்னும் ஊரில் பம்பாபதீச்வரர்கோவில் என்ற ஒரு பழைய தேவஸ்தானமுண்டு. அதிலிருக்கிற சில சாஸனங்களால் போதய்ய ராஜா (Bodayya Raja) என்றொருவர் சாலீவாகன சகம் 1121 வருஷத்தில் அதாவது கி. பி. 1199 வருஷத்தில் தேவஸ்தானத்தின் உட்பிரா்காரத்தில் ஹம்பி என்னும் ஊரை கோவிலுக்கு மான்யமாக விட்டதாக சொல்லியிருக்கிறதென்று தேவஸ்தானத்தார்கள் சொல்லுகிறார்கள். ஆனாலிதுவரையிலந்த சாஸனம் அகப்பட்டபாடில்லை. அது மட்டும் கண்டுபிடிக்கப்பட்டால் விஜயநகரவம்சம் அக்காலம் முதல் ஏற்பட்டதாக ஒருவாறு சொல்வதற்கு ஒரு முக்கிய ஆதாரமாகும். இந்த தேவஸ்தானத்தார்கள் சொல்வது போலவே சில சாஸன சர்சை செய்தவர்களும் இந்த வம்சம் சற்றேறக்குறைய அக்காலத்திலுண்டானதாக ஜனங்கள் சொல்லுகிறார்கள் என்று எழுதியிருக்கிறார்களேயல்லாது ஒருவராவது ஆதார ரூபமாய் அக்காலத்தை எடுத்துக் காட்டவில்லை.



ஆனால் 14-வது நூற்றுண்டில் இந்த விஜய நகர வம்சமுண்டானதற்கு ஏதாவது ஆதாரமுண்டா என்று கேள்வி பிறக்கலாம். இதற்கு ஆதாரங்களுண்டு. அவைகளை நாம் இங்கிருந்து உரைப்போம்:—14-வது நூற்றுண்டில் மகமதியர்கள் முதல் முதலில் தென்நாட்டில் நுழைய ஆரம்பித்தார்கள். இதே நூற்றுண்டின் துவக்கத்தில் காகதீய வம்சத்தரசர்கள் ஆண்டுவந்த ஓரங்கல் என்ற பட்டணத்தை சகம் 1244 அதாவது கி. பி. 1322-வது வருஷத்தில் பிடித்து அன்னாட்டு காகதீய ராஜாக்களையும் தோல்வியடைந்து ஓடச்செய்தார்கள். இந்த ஓரங்கல் என்பது தத்காலம் வைத்த ராமாத் சீமையிலிருக்கிறது. அது தெலுங்கு தேசத்தின் வடமூலை, அவ்விடத்தில் தான் காகதீய வம்சத்தரசர்கள் ஆண்டுவந்தது. இந்த வம்சத்தரசர்களை ஜயித்த பிறகு முகமதியர்கள் தக்ஷிணதேசத்தில் முற்றிலும் நுழைய ஆரம்பித்து வெகு ராஜாக்களை உபத்திரவிக்க ஆரம்பித்தார்கள். ஆனால் அந்த ஸமயத்தில் அப்படி புறப்பட்டுவந்த மகமதீயர்கள் ஆளுகை நீடித்து நிற்கவில்லை. அவர்களால் தோல்வி யடைவிக்கப்பட்ட அநேக அரசர்கள் ஒன்றாய்ச்சேர்ந்து முகமதீயர்களைத் தென்தேசத்தைவிட்டு வெருட்ட பிரயத்தனப்பட்டார்கள். அப்படி பிரயத்தினப்பட்டவர்களில் முக்கியமானவர்கள் புக்கன்; ஹரிஹரன் என்ற இரண்டு அரசர்கள். இவர்கள்தான் தாங்கள் துலுக்கர்களை ஜயித்த பிறகு விஜயநகரம் ராஜ்யத்தையும் விஜயநகரம் வம்சத்தையும் உண்டாக்கினார்கள். ஆகையால் இந்த விஜயநகரம் என்பது 14-வது நூற்றுண்டில் புக்க மகாராஜாவால் முதல் முதலிலுண்டாக்கப்பட்டது. இந்த ஸங்கதிகளெல்லாம் 'பல்லாரி ஜில்லா மானுயல்' (Manual) என்னும் புஸ்தகத்தைப் படித்தால் இன்னும் நன்றாக விளங்கும்.

புக்க மகாராஜாதான் முதல் முதலிலாண்டதாகவும் அப்புறம் ஹரிஹரன் ஆண்டதாகவும் ஜனங்கள் சொல்லுகிறார்கள். இந்த வம்ச முண்டானகாலம் சாலிவாகன சகம் 1258 அதாவது கி. பி. 1336. இதே வருஷம் ஒரு தாம்பர சாஸனத்தில் ஹரிஹர ராஜாவுடைய முதல் வருஷத்திய ஆளுகையாகக் குறிக்கப்பட்டிருப்பதால் ஒருவாறு ஸரியாக நாமிதை ஒப்புக்கொள்ளலாம். இவருக்கும் முன்னால் புக்கன் என்ற அரசர் ஆண்டதாக நாம் சொல்லியிருக்கிறோமாதலால் அக்காலத்திலேயே அதாவது 1336-வது வருஷத்திற்கு முந்தியே இந்த வம்சமுண்டாயிருக்க வேணுமே என்று கேள்விவரும். ஜனங்கள் எவ்வளவு கதைகள் சொன்னபோதிலும் பெரும்பாலும் விஜய

நகர சாஸனங்களில் ஹரிஹரனைத்தான் முதல் ராஜா
வாக வைத்திருக்கிறது. அநேக சாஸனங்களவனைத்
தான் விஜயநகர வம்சத்தின் முதல் மன்னவனாக எடுத்
துக் கூறுகின்றன. அவனுக்கு அப்புறம் ஒரு புக்கனு
மாண்டதாகச் சொல்லியிருக்கிறது. ஆகையால் முதல்
முதல் ஒரு புக்கன் ஆண்டபோதிலும் அவனவ்வளவு
பெயர்பெற்றவனல்லவென்றும் ஹரிஹரனுடைதான்
விஜயநகர வம்சம் துவங்கினதாகவும் அப்புறம் இரண்
டாவது புக்கன் ஒருவன் பட்டத்திற்கு வந்தான் என்
றும் நாம் ஒப்புக்கொள்ளவேண்டியதாகவிருக்கிறது.

விஜயநகர வம்சத்தின் சாஸனங்கள் அபரிமிதம்.
வெகு அழகாய் தாம்பரத் தகட்டிலும் சல்லிலும் வெட்
டப்பட்டு கோவில்கள்தோறும் கண்ணைப் பறித்து
நிற்கும். நமது தென்னாட்டுக் கோவில்களில் ராமேச்
வரம் முதல் துங்கபத்ரைக்கரைவரையில் ஒரு கோவி
லாவது விஜயநகர சாஸனமில்லாதது கிடையவே
கிடையாது. ஆகச்சே இந்த வம்சத்தரசர்கள் வெகு
கீர்த்திபெற்றவர்கள்; வெகு மகிமைபொருந்தியவர்
கள்; தென்னிந்தியா முடிய ஆளுகை செலுத்தினவர்
கள் என்று நன்றாய் ஏற்படுகிறது. அப்பெயர்ப்பட்ட
மன்னவர்களுடைய பட்டணத்தின் அழகுக்கும் அல
ங்காரத்திற்கும் சிறப்பிற்கும் செல்வாக்குக்கும் சொ
ல்லவும் வேண்டுமோ. அப்துர் ரஜாக் என்றொரு மக
மதீய வித்வான் தான் கி. பி. 1442 வருஷத்தில்
விஜயநகரத்தைப் பார்த்தபோது அதின் சிறப்பைப்
பற்றி வெகுவாய் வருணித்திருக்கிறார். கட்டடங்கள்
வெகு சிங்காரமானவைகளாகவும் கடைத்தெருவுகள்
வெகு சிறப்புற்றவைகளாகவும் ஏழு கோட்டைச்
சுவர்கள் இருந்தனவாயும், ஊரிலிருந்த ஒவ்வொரு
வனும் பணக்காரன் பிரபு என்றும், பணம் கொழுத்து
நகை கொதித்து வீட்டுக்கு வீடு குபேரன் மாளிகை
போல் விளங்கிவந்ததாகவும், இந்த விஜயநகரத்தைப்
பற்றி அவர் அதிகமாக வியப்புற்று வருணித்திருக்
கிறார். அவர் சொல்லியிருப்பதையும் தென்னாட்டில்
ஒரு ஊர் தவறாமல் இந்த வம்சத்து அரசர்களிட
மிருந்து தானமும் மான்யமும் பெற்றிருப்பதையும்
பார்த்தால் இந்த ஸமஸ்தானம் வெகு காசு கொழுத்த
ஸமஸ்தானமாகத்தா னிருந்திருக்கவேண்டு மென்ப
தற்கு யாதொரு ஆக்ஷேபணையுமில்லை.

இவ்வளவு சிறப்பிலிருந்த இந்த ஊர் இப்போது
பாழாய்ப்போய் நாயும் நரியும், புலியும் சிறுத்தை
யும் வாஸஞ்செய்யும்படி யாவானேன் என்று ஒரு
சரித்திரம் எழுதுகிறவர் ஊகித்து ஒருக்கால் இவ்
வளவு பணத்தில் கொழுத்து கொஞ்சநாளைக்கெல்லா
மங்கிருந்த ஜனங்கள் சுகவாசிகளாகி பலமிழந்து
பின்பு முகமதியர்கள் வந்தகாலத்தில் அவர்களை எதிர்
க்க சக்தியில்லாமல் அவர்களால் நாசஞ்செய்யப்பட்
டார்களோ என்னவோ என்று புலம்புகிறார்.

என்னமோ நாம் ஒருவர் சொல்லுவதையுங் கவ
னிக்காமல் சரித்திர ரீதியாய் பரிசோதிக்கும்காலத்
தில் இந்த சமஸ்தானம் வெகு சீக்கிரத்தில் ஹரிஹர
னால் உண்டாக்கப்பட்ட பிறகு பெருமையிலும் பணத்
திலும் கீர்த்தியிலும் சக்தியிலும் அதிகரித்து தென்
தேசமுடிய ஆண்டுவந்தது. இந்த தேசத்திற்கு இவ்
வளவு பிரதாபம் வரவே இந்த வம்சத்தரசர்களுக்
கும், அப்போதுதான் தென்தேசத்திற்கு மென்
மேலும் வந்துகொண்டிருந்த துலுக்கர்களுக்கும் எப்
போதும் சண்டையும் சச்சரவும் உண்டாய்க்கொண்
டேயிருந்தது. கடைசியாய் சகம் 1486-வது வரு
ஷத்தில் அதாவது கி. பி. 1564-வது வருஷத்தில்
கிருஷ்ணா நதிக்கு வடகரையில் வேரூன்றிவிட்ட
எல்லா மகமதீய ராஜாக்களும் ஒன்று சேர்ந்து விஜய
நகரத்தைப் பிடித்து அந்தக்காலத்தில் அரசாண்ட
மன்னனைக்கொன்று ஊரை ஹதம்பண்ணி தென்தேச
த்தில் விஜயநகரத்தின் ஆளுகையையும் முற்றிலும்
குலைத்துவிட்டார்கள். இதுதான் உண்மையான சங்
கதி. அப்படி இந்த வம்சம் பாழாய்ப் போனபிறகு
இதில் சிலர் தேசாதேசம் ஓடிப்போனார்கள். ஒரு
வன் 'அனேகுந்தி ஸமஸ்தானம்' என்று இப்போது
பல்லாரி ஜில்லாவில் பெயர் வழங்கும் ஊரில்போய்
தான் விஜயநகர வம்சஸ்தன் என்று சொல்லிக்
கொண்டு உட்கார்ந்தான். அவன் தலைமுறைக்கு இன்
றைக்கும் விஜயநகர வம்சஸ்தன் என்ற பட்டமுண்டு.
மற்றொருவன் திருப்பதிக்கு ஸமீபத்தில் சந்திரகிரி
ராஜ்யத்தில்வந்து தான் விஜயநகர வம்சஸ்தன்
என்று சொல்லிக்கொண்டு வெகுநாள் சந்திரகிரியி
லரசாண்டு வந்தான். இந்த வம்சத்தரசர்களிடமிரு
ந்துதான் நமது நாட்டை இப்போது ஆளுமங்கிலே
யர்கள் முதல் முதலில் ஸெயிண்டு ஜார்ஜ் என்னுங்
கோட்டையை சென்னப்பட்டணத்தில்கட்ட உத்
திரவு பெற்றது. இவ்வளவு தூரஞ்சொல்லிவிட்டு
இந்த விஜயநகர வம்சத்தில் ஹரிஹர ராயர்காலம்
முதல் அரசாண்டுவந்த மன்னர்களையும் அவர்கள்
காலத்தையும் சாசன ஸகர்ச்சையா விதுவரையில்
ஏற்பட்டிருக்கிறபடி நாம் ஒருவாறு எடுத்துச் சொல்
வோம்.

புக்கன்.—இவர்காலம் 1336-வருஷத்திற்கு கொ
ஞ்சம் முன்னாலிருக்கலாம்.

ஹரிஹரன்.—இவர் 1336-முதல் 1350-வரையில்
அரசாண்டார். அப்புறம் இவர் தம்பி

புக்கர் (இரண்டாவது புக்கர்) 1350—1379.
|
ஹரிஹரர் (இரண்டாவது) 1379—1401.
|
தேவராயர்.—இவர்காலம் 1401—1418 (?)
|
விஜயபூபதி 1418—1422.
|
தேவராயர் (இரண்டாவது) 1422—1456.
|
ப்ரௌடதேவர் (1456—1477.)
|
மல்லிகார்ஜுனராயர் (1481—1487.)
|
விருபாக்ஷர் (1488—1490.)
|
திம்மராயர்.
|
ஈசவரராயர்.
|
நரஸராயர்.
|
வீரநரஸிம்மன் கிருஷ்ணதேவராயர் (1509—1530.)
|
அச்சுதராயர் (1530—1542.)

இவருக்கு அப்புறம் இவர்கள் தம்பிகளுக்கும் இவர்களுக்கும் அநேகவித கலகங்களுண்டாய் இவர் தம்பிகள் இவரைப்பிடித்து சிறையில்வைத்து தாங்கள் ராஜ்யபரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கையில்தான், மகமதியர்கள் இதுதான் நமக்கு நல்ல ஸமயம் என்று ஒன்றுசேர்ந்து இவர்களை தலைக்கோட்டை என்னுஞ் சண்டையில் உதைத்து 1564-ம் வருஷத்தில் விஜயநகர ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டது.

இவ்வளவு அரசர்களுக்குள் கிருஷ்ணராயரும் சதாசிவருந்தான் வெகு தர்மங்கள் நமது நாட்டுக்கோவில்களுக்குச் செய்திருக்கிறார்கள். நாமிந்தவிடத்தில் சொன்னவைகள் சற்றேறக்குறைய இதுவரையில் சாசன பரீக்ஷைகளால் கண்டுபிடிக்கப்பட்ட காலங்கள். இவைகளை ஒருவழியாக வைத்துக்கொண்டு நமது தேசத்து வித்வான்கள் நமது நாட்டு சாஸனங்களைப் பரீக்ஷிப்பார்களேயானால் இன்னும் எவ்வளவோ சங்கதிகளை வெளிபாக்குவார்கள்.

இவ்வளவுமட்டில் விஜயநகரத் தரசர்களைச் சொல்லிவிட்டு இனி நாம் விஜயநகரத்தில் பாழாய்க்கிடக்கும் கட்டடங்களை ஒருவாறு எடுத்துக் கூறுவோம்.

**ச. ம. நடேச சாஸ்திரி, பி. ஏ.**

# கொசுகுகள்.

மனிதரால் சகிக்க முடியாத நாற்ற முதலிய நீர்நிலைகளிலே உள்ள அல்லி முதலியவற்றின் இலைகளின்மீது கொசுகுகள் முட்டையிடுகின்றன. அவைகள் சுத்தமான இடங்களில் முட்டையிடுகிறதேயில்லை. இப்படி இடப்படும் முட்டைகள் இரண்டரை அல்லது மூன்று நாளில் பொரிக்கப்படுகின்றன. பொரிக்கப்படும் குஞ்சுகள் முதலில் குட்டையான மயிர்த்துண்டுகள்போலிருக்கும். இந்த நிலைமையில் இவைகள் நிலைபெயர்ந்தாலொழிய கண்ணிற்குப் புலப்படாத அவ்வளவு நுட்பமாயிருக்கின்றன. இவைகளை அணுதரிசனி (microscope) என்னும் பூதக்கண்ணாடி மூலமாய்ப் பார்த்தால் அவைகள் அசைவதற்கொன்றும் சுவாசிப்பதற்கொன்றுமாக இரண்டு வால்களுடைத்தாயிருப்பதைக் காணலாம். இவைகள் சுவாசிக்கும் பிராணிகள்தான் என்று எப்படி உறுதியாய்க் கூறலாமென்றால் இவைகள் தாம் பொருந்தியிருக்கும் தண்ணீர் எவ்வளவு விஷமுள்ளதாயிருப்பினும் சகிக்கின்றன. ஆனால் வாயு விஷவாயுவாயிருப்பின் சகிப்பதில்லை. உதாரணமாக, புகையிலை அல்லது கந்தகப்புகைபட்டால் உடனே மரணமடைகின்றன.

இவைகள் தீன் தின்பதற்காக, குறடுபோன்ற இரண்டு கருவிகளையும் அவற்றினுள்ளே பன்றிமயிர் போன்ற இரண்டுமயிர்க்குச்சுகளையும் அவற்றினுள்ளே வட்டமான இரண்டு அலகுகளையும் உடைத்தாயிருக்கின்றன; தீன் தின்னுதிருக்கும்போது இக்கருவிகளைத் தலையினுள்ளே வலித்துக்கொள்ளுகின்றன. தீன் தின்னும்போது மேற்சொன்ன அலகுகளை வெளியே கொண்டுவருகின்றன. இவ்வலகுகள் எப்படிப்பட்ட பொருள்களையும் துளைத்து உட்பிரவேசிக்கும். இக்கொசுகுக்குஞ்சுகள் உயிருள்ள எந்தப் பிராணியையும் உட்கொள்ளுவதில்லை. அழுகி உட்கிப்போன பூச்சி பொட்டுகளையும் பூண்டுகளையுமே உண்கின்றன. தண்ணீரைமலினப்படுத்தும் எவ்வகைப் பதார்த்தங்களையும் அதிக அவாவுடன் வயிறு நிரம்பப் புசிக்கின்றன. இப்படியாகத் தண்ணீரிலுள்ள மலினபண்டங்களனைத்தையும் உண்டு தண்ணீரைச் சுத்தப்படுத்துகின்றன. இப்படிச்செய்வது உலகத்திற்கு ஒரு பெரு நன்மையல்லவா?

பின் இரண்டு நாளைக்குப் புழுநிலைமை யடைந்திருக்கின்றன. இந்நிலைமையில் இரைகொள்வதில்லை. இவ்விரண்டு நாளும் வாலிலுள்ள துவாரத்தினால் சுவாசிக்காது. மார்பினிடத்திருந்து புறப்படும் இர

ண்டு நீண்ட குழைகளால் சுவாசிக்கின்றன. குஞ்சாக இருந்த நிலைமையில் உடைத்தாயிருந்த சுருசுருப்பையும் பரபரப்பையும் இழந்து இவ்விரண்டு நாளும் மந்தகதி யடைந்திருக்கின்றன. இவ்விரண்டு நாளில் இவற்றின் மேலுள்ள மெல்லிய மயிர்கள் உதிர்ந்து போகின்றன.

இங்ஙனமாகத் தண்ணீரிலுள்ள மலினப்பொருள்களைத் தின்று இருபத்தொரு நாளுக்குப்பின் புழுநிலையில் இரண்டு நாளும் கழித்துப் பின் மூன்றே நாளைக்கு வாயு சஞ்சாரம் செய்கின்றன. இப்படி வாயு சஞ்சாரஞ் செய்யுங்காலத்தில்தான் மனிதர் பெரும்பான்மையாய் இவற்றைக் காண்பதும் இவற்றின் மேல் வெறுப்புக் கொள்வதும்; ஆகவே இவை துன்பஞ் செய்வது மூன்று நாளேனும் நன்மை செய்வது எழுமடங்கு நாளதிகமல்லா? இதனைச் சீர்தூக்கிப்பாராது மனிதர்கள் அவை செய்கின்ற துன்பத்தினையே பெரிதாக எண்ணுகிறார்கள்.

ஆகக்கூடி, கொசுகுகள் முட்டை நிலையில் இரண்டரை அல்லது மூன்றுநாளும், குஞ்சு நிலையில் இருபத்தொருநாளும், புழுநிலையில் இரண்டுநாளும், பின் வாஸ்தவமான கொசுகு நிலையில் மூன்றுநாளுமாக ஏறக்குறைய ஒருமாத ஆயுள் அளவை உடையனவாயிருக்கின்றன.

இந்தியாவில் மீன்களுக்கு கொசுகுகளே ஆதாரமாயிருக்கின்றன. புழுவுருக்கொண்டிருக்கும் நிலைமையிற்கூட அவை மீன்களால் பக்ஷிக்கப்படுகின்றன. இப்படி கொசுகுகள் மீன்களுக் கிரையாவதற்குச் சாக்ஷி: ஒரு துரை இந்தியாவில் ஒரு ஊரிலிருந்து மற்றோரூரிற்கு மீன்களை உயிரோடனுப்பவேண்டின போது, கொசுகுகளைப் பிடித்து ஆகாரமாக மீன்களுடன் வைத்தனுப்பினராம். மீன்களும் க்ஷேமமாய்ப் போய்ச்சேர்ந்தனவாம். கொசுகுகள் சேதமாகாமல் விர்த்தியானால், ஒருவருஷ பரியந்தத்திற்குள்ளாக, பூமிக்கும் சூரியனுக்கும் இடையிலுள்ள தூரத்தில் இரண்டு கோடிமடங்களவான ஓர் கயிற்றின் பிரமாணமாகும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். கொசுகுகள் இவ்வளவு விபரீதமாக உற்பத்தியாவதேன்? அவைகள் மீன்களுக்கு உணவாதலின் என்க.

ஆகவே கொசுகுகளாலும் இருவகைப் பயனுள்ளதென்று காண்க.

மா. நடேசன்.

---

# அன்னி பெஸாண்ட் அம்மாள் இந்து ஸ்திரீகளைப்பற்றிச் சொல்லியது.

I.

மக்கட்பிறப்பிலே தளராத மன உறுதியும் அதிக பெருமையும், மிக்க இனிமையும், நீங்காத அன்பும் ஏககாலத்தில் ஒருமிக்க நிறைந்தவராக, இந்தியாவிலுள்ள மகாவித்வான்களால் உலகப்பிரசித்திபெற்ற தங்கள் காவியங்களில் வர்ணித்து எழுதப்பட்டிருக்கும் நற்குணவிசேஷங்களுடைய ஸ்திரீகளைக் காட்டிலும் உத்தமமான ஸ்திரீகளை வேறு எந்த கிரந்தங்களிலும் காட்டவே முடியாது.

ஸ்ரீ இராமபிரானுடைய மனைவியாகிய சீதாப்பிராட்டியாரின் நற்குண நற்செயல்களை அறியாதார்யார்!

தன் ஆசைநாயகனாகிய இராமபிரான் அரசிழந்து நாடுந்துறந்து காட்டிறகுச் சென்றகாலத்தில் தானும் கூடச்சென்று எல்லாச் செல்வங்களும் நிறைந்த அரண்மனையில் அந்தப் புரத்திலிருக்க வேண்டிய தனது அழகையும் சொகுசையும் பாராட்டாமல் தன் கணவனுடன் வனவாசிகளது நாகரீக மற்ற குடிசைகளில் காலம் கழித்து எப்பொழுதும் சந்தோஷத்தோடும் மனத்திருப்தியோடு மிருந்தாள். அதுவுமன்றிக் கொடிய அரக்கனாகிய இராவணன் இராமனிடந்திலிருந்தும் தன்னை பலாத்காரமாய்த் தூக்கிச் சென்று சிறையிட்டுக் கொன்றுவிடுவதாகப் பலமுறை பயமுறுத்தியும் மற்றப் பல இம்சைகள் செய்தும் தன் மனதைரியத்தை விடாமலும் கற்புநிலை குலையாமலுமிருந்தாள். பிறகு தன் கற்பைக் குறித்து இராமன் வீணான சந்தேகங்கள் கொண்டு குற்றம் சாட்டியதைப் பொறுமையும், வணக்கமும், தாழ்வும், காம்பீரமும் நிறைந்த கண்ணியதையுடனே சகித்துக்கொண்டு சற்றேனும் கோபமின்றி முகமலர்ச்சியுடன் அக்கினிப்பிரவேசம் செய்து தன் கற்பை இவ்வுலகத்துள்ளார் யாவரும் மெச்சி தன்னைத்தெய்வமென்றே புகழ்ந்து கொண்டாடும்படி கீர்த்தியை நிலைபெறச் செய்தாள்.

வால்மீகியால் அலங்கரித்தெழுதப்பட்ட ஜானகியைப்போல் வேறு ஒரு ஸ்திரீயையும் மற்றக் கவிகள் அழகு பெறச்செய்யவேயில்லை.

சாவித்திரியோ அகாலமரணத்திற்குள்ளாய் காலன் கையிற் சிக்கிக்கொண்ட தன் அருமைக் கணவனாகிய சத்தியவானை தன் தவமகிமையாலும் கற்பின் வலி

மையாலும் யானைவாயினின்ற கரும்பை மீட்டினாற்போல மரணத்திலிருந்து விடுவித்தாள். இவவிர அசாதாரணமான திறமை யாவராலும் மெச்சத்தக்கதன்றோ?

எல்லா நற்குணங்களும் நிறைந்த ஸ்திரீ யார் என்று ஒருவர் கேட்பாராகில் சகுந்தலையைத்தவிற வேறு ஒருவளையும் நாவினுல் உச்சரிக்கக்கூடாது என்று ஜெர்மன் தேசத்து மகாகவிஞராகிய கத்தி (Goethe) என்பவர் எழுதுகிறார்.

இனிக்கௌசலையைப்போல் தாய் வேறு யாரிருந்திருக்கிறார்கள். எல்லா உலகங்களையும் தன் வயிற்றில் அடக்கிய ஸ்ரீமந் நாராயணனைப் புத்திரனைப் பெற்றெடுத்த மகாபாக்கியத்தையுடையவளென்றால் வேறு என்னசொல்லவேண்டும். இவர்கள்போல் இந்தியாவின் புகழைப் பரவச்செய்த மற்ற ஸ்திரீகளைக் கணக்கிடுவோமாயின் அக்ஷயபாத்திரம்போல் அள்வற்று வளர்ந்துகொண்டேயிருக்கும். ஆதலால் அதைவிட்டு முற்காலத்து ஸ்திரீகளின் நிலைமையைச் சொல்லுவோம்.

முற்காலத்து ஸ்திரீகள் சுவாதீனம் உள்ளவர்களாய், கண்ணியதைபெற்று திடசித்தத்துடன் விளங்கிவந்தார்கள். ஒவ்வொரு ஸ்திரீயும் தன் கணவன் பூஜை முதலிய செய்யும்பொழுது பக்கததிலேயிருந்து பணிவிடைசெய்து வருவாள். "இல்லறமல்லது நல்லறமன்று" என்ற பழமொழிப்படி இல்லாளுடன் செய்யும் தர்மமே மேலானது. ஆதலால் ஸ்திரீயில்லாமல் புருஷனுக்கு சடங்குகள் செய்ய யோக்கியதை ஏற்படமாட்டாது. அப்படி யாதாயினுமொருவன் செய்யப்புகின் அந்தச் சடங்குக்குப்பலன் கிடையாது. ஸ்திரீயானவள் புருஷன் உயிரோடிருக்கும் காலம் வரை அவனுக்குத் துணையாயிருக்கிறாள். புருஷன் இறந்தபிறகும் அவனுக்குக் கிரியைகள் நடத்தி அவனுக்குத் திருப்தி உண்டாக்குகிறாள். தானும் இறந்துவிடின் இருவருமாக சுவர்க்கத்தில் சந்தோஷமாகக் கூடியிருக்கிறார்கள். எவ்விதத்திலும் ஸ்திரீ புருஷர்களைப் பிரித்துப்பேசுவது விபரீதமும் பொருளில்லாததுமாகும். ஸ்திரீயின்றிப்புருடனாவதுப் புருடனின்றி ஸ்திரீயாவது செய்யும் தொழில்கள் எத்தன்மைத்தாயினும் அது வீணாகும். இவ்வுண்மையை யாவருக்கும் நிலை நிறுத்தும் பொருட்டு எல்லாத் தொழிற்கும் ஆதியாகிய கடவுளையும் 'அர்த்தநாரீசுரன்' என ஓர் சிறப்புப்பெயர் கொடுத்துத் துதித்துக் கூறுகின்றனர் பெரியோர்.

இந்துப் பெண்களுக்கும் புருடர்களுக்குமுள்ள சம்பந்தா சம்பந்தங்களும் ஐரோப்பிய ஸ்திரீ, புருடர்களுக்குளுள்ள சம்பந்தா சம்பந்தங்களும் தற்காலத்தைப்போலவே முற்காலத்திலும் வித்தியாசப் பட்டிருந்தன. அனேக விஷயங்களில் ஐரோப்பியருக்கு விரோதமாகவும் சிலவற்றில் முற்றிலும் வெறுக்கத்தக்கதாகவுமிருக்கும். உதாரணமாக ஐரோப்பிய ஸ்திரீ புருஷர்களுக்குளுள்ள சமநிலைமை இந்தியாவில் ஒரு குடும்பத்திலாவது, ஜனசமூகத்திலாவது அல்லது மொத்தமாய் ஜாதியிலாவது ஒருக்காலுமிருந்ததில்லை. இப்பொழுதும் கிடையாது. இந்துப் பெண்களுக்கும் புருடர்களுக்குமுள்ள தாரதம்மியத்தை நன்றாய் ஊகித்து ஆராய்ந்து அறிந்தாலொழிய மேல்பார்வையாய் விசாரித்தால் வெளியாகப் புலப்படமாட்டாது. ஆகாயத்தில் அனேகாயிரம் பூச்சிகள் பறப்பதும், அனேககோடி நக்ஷத்திரங்கள் பிரகாசித்துக் கொண்டிருப்பதும் இன்னும் பலவிசித்திரங்களும் நமது வெறுமையான கண்ணுக்குப் புலப்படாவிடினும் தூர திருஷ்டிக் கண்ணாடி, பூதக்கண்ணாடி முதலிய கொண்டு பார்க்குங்கால் தோன்றுமாறுபோல் ஆழ்ந்த யோசனையும், நிறைந்த படிப்பும், விஸ்தாரமான அனுபோகமும் விடா முயற்சியும் ஆதாரமாகக் கொண்டு பரிசோதிக்குங்கால் அவ்விரு பாலார்க்குமுள்ள ஒற்றுமை நன்கு விளங்கும்.

இந்து ஸ்திரீகளுக்கும் புருடர்களுக்கும் ஒரு விதமான சமநிலைமையுண்டு. அதை ஐரோப்பியர்களும் அவரது நடைஉடைபாவனை முதலியவைகளை ஒன்று குறையாமலும் சில குறைந்தும் அனுசரிக்கிற போலி ஐரோப்பியர்களும் இல்லையென்று மறுத்தாலும் உண்மைபொய்யாகாது. இந்தியாவில் ஒவ்வொரு மனிதனுக்கும் சில சுதந்தரங்கள் உண்டென்றும் அதை மற்றவர் கெடுக்கவாவது அல்லது தடுக்கவாவது முடியாதென்றும் சொல்லும்படியான கொள்கை கிடையாது. ஆனால் ஒவ்வொருவரும் சில கடமைகளைத் தவறாமல் செய்யவேண்டியது என்று மாத்திரம் ஏற்பட்டிருகிறது. அக்கடமைகளைச்செய்ய அவர்கள் கட்டுப்பட்டிருக்கிறார்கள். உனக்கு மற்றொருவன் ஒரு காரியம் செய்யக் கடமைப்பட்டவன். அதைச் செய்யத்தவறி விட்டான். அவன் செய்யவில்லையே ஆதலால் நான் கடமைப்பட்டு அவனுக்குச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யமாட்டேன் என்று நீ சொல்லமுடியாது. உன்னுடைய கடமைகளை நீ கட்டாயம் செய்தே தீரவேண்டும். நீ எவனுக்குக் கட்டுப்பட்டிருக்கிறாயோ அவனுனக்குச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்துவிட்டானா என்று ஹிந்து விதிகள் கேட்கிறதில்லை. ஆனால் நீ செய்யவேண்டிய காரியங்களைச் செய்தாயா? உன் காரியங்கள் முடி

ந்தனவா? என்று மாத்திரம் கேட்கும். இது புருடருக்கும் ஸ்திரீகளுக்கும் சமமானகேள்வி. புருடர் தங்கள் கடமைகளைச் செய்யாவிட்டால் அவர்களை மன்னித்து ஸ்திரீகள் செய்யாவிட்டால் அவர்களைக் கண்டிக்கும் விதிகள் இந்தியாவில் கிடையா. இருவருக்கும் ஒரு தன்மைத்தாய் இருவரையும் ஒரே நிலைமையில் வைத்து நடுவு நிலைமை காப்பாற்றும் திறனுடையவைகள் அவ்விதிகள். ஆகையால் ஸ்திரீ புருடர்கள் ஒருவிதமாய் சமநிலைமையை அடைந்திருக்கிறார்கள். எதன் முன்னுல் என்று கேட்போர்க்கு சாத்திரங்களிற்கூறிய விதிகளின் முன்னென்று உணர்த்தலாயிற்று. தேவராலும் மூவராலும் மாற்றக்கூடாத ஆக்ஞையை மீறிநடக்கிற குற்றவாளி சக்கிரவர்த்தியாயினும் சரி, கேவலமான பிச்சைக் காரனுயினும் சரி அவர்களைத் தண்டித்து நாசம் செய்துவிடுகிறது: ஒரு குற்றவாளியானவன் "அவன் எனக்கு முன்னமே தீங்கு செய்திருக்கிறான். ஆகையால் நானும் அவனுக்குத் தீங்கு செய்தேன்" என்ற வீண் போக்குகளை சொன்னுல் நியாயம் அவனை மன்னிக்கமாட்டாது. "ஈயும் தலைமேலிருத்தலால் காயும் கதமின்மைநன்று" "நாய்*கவ்விற்றுன் கவ்விடுவரோ" என்றபடி கோபியாது பிறர் செய்வதை உத்தேசியாதே ஒருவன் தான் செய்யவேண்டிய கடமை முடிவுபெறச் செய்யவேண்டிய தவசியம்.

இந்தப்பொதுவான உண்மையே மனிதர்களை அடக்கியாளும் சாராம்சமாயிருக்கிறது. ஒரு யந்திரத்தில் ஒவ்வொரு பாகமும் தன் தன் தொழிலை எவ்விதமாகச்செய்கின்றதோ அவ்விதமே ஜனக்கூட்டங்களிலும் ஆண்களும் பெண்களும் தங்கள் தங்கள் தொழில்களை இயற்றச்செய்து அவர்களது சம்பந்தங்களையும் சேர்படுத்தி ஒழுங்காக நடப்பித்து வருகிறது.

இந்தியாவிலுள்ள சாஸ்திரங்களில் புருஷர்களுக்குள்ள சுதந்தரங்களைப்பற்றி யாதொன்றும் எழுதப்படவேயில்லை. புருடர்களுடைய சுதந்தரங்களைப் பற்றி விசாரணை எவ்வளவு ஏற்பட்டிருகிறதோ அவ்வளவே ஸ்திரீகளைப்பற்றியும் ஏற்பட்டிருக்கிறது. அதாவது இருபாலார்களது சுதந்சரங்களைக் குறித்து யாதொரு விசாரணையும் நடந்தேறிவந்ததாகக் காணப்படவில்லை. ஸ்திரீகளது சுவாதீனத்தைப்பற்றி யாவது சமான நிலைமையைக் குறித்தாவது அல்லது அவர்களுக்கு அளிக்கவேண்டிய பாத்தியதைகளைக் குறித்தாவது நடக்கும்விவாதங்களை இந்துக்கள் கேட்டால் இருதிறந்தாருக்கும் நகையை விளைவிக்கும்.

ஆதலால் சிரிப்புக்கேதுவான விவாதங்களை ஒழித்து இந்து ஸ்திரீ புருடர்களது கடமை யின்னவென்று விஜாரிப்போம்.

சிறுபெண்கள் வழக்கமாகத் தங்கள் பிறந்த வீட்டில் சந்தோஷமாக வளர்ந்து வருவார்கள். அந்த வீட்டில் பாட்டனும், தகப்பனும், தாயும், குழந்தைகளும், சிற்றப்பன், பெரியப்பன், சிறியதாய், பெரியதாய், தம் குழந்தைகளுடன் வாழ்ந்துகொண்டிருப்பார்கள். யௌவனமடைந்த புருஷர்கள் தங்கள் மனைவியருடன் அக்குடும்பத்திலேயே இருப்பார்கள். அதை விட்டு வேறிடம் போவது வழக்கமில்லை. நூதனமாகக் கலியாணமான ஒருவன் வீட்டை விட்டுப் பிரியாமல் புதிதாகத் தன் மனைவியைக் குடும்பத்தில் சேர்த்துக்கொள்ளுகிறான். புதிதாய்க் கலியாணம் நடக்குந்தோறும் குடும்பத்தின் தொகை விருத்தியடைந்து கொண்டேவருகிறது. ஐரோப்பியர்களோ அப்படியல்ல. ஒருவன் புதிதாகக் கலியாணம் செய்து கொள்வானுகில் அவன் தன் மனைவியுடன் பிரத்தியேகமாகவேறு குடும்ப உற்பத்திசெய்கிறான். ஐரோப்பியர்களுக்குக் கலியாணம் குடும்பத்தை க்ஷீணிக்கச் செய்கிறது. உதாரணம்: ஒரு குடும்பத்தில் நான்கு பிள்ளைகளிருக்கிறார்கள். அதில் ஒவ்வொரும் கிரஹஸ்தர்களாய் விட்டால் குடும்பத்தில் கிழவனும் கிழவியு மாத்திரம் பாக்கியிருப்பார்கள். குடும்பம் வெகு சீக்கிரம் உலைந்துபோகும். இந்துக்களோ நாளுக்கு நாள் குடும்பவிர்த்தி செய்து வாழையடிவாழை போல் தழைத்து ஓங்குகிறார்கள். குடும்பவிருத்திக்காக நியமிக்கப்பட்ட விவாகமென்னும் வழக்கத்தைக் குடும்ப ஹானிக்கு ஏது வாக்குதல் விபரீதமாகும்.

சிலவேளைகளில் சிறுபெண்களுக்கு ஐரோப்பிய அரசர் வீட்டுப்பெண்களைப்போல குழந்தைப் பிராயத்திலே கலியாணம்செய்து விடுகிறார்கள். அச்சிறுமியர்கள், வீட்டிற்கு எஜமானிகளாய் குடும்பம் நடத்தவேண்டியதற்கு முக்கியமான கல்விகற்றுக் கொடுக்கப்படுகிறார்கள். மேலும் அச்சிறுமியர்களுக்கு வேதம் ஒன்றுதவிர மற்ற மதசம்பந்தமான கல்விகற்றுக் கொடுப்பதும், அப்படி மதாசார நூல்களைக் கற்றுக்கொடுப்பதனுலாய ஆழ்ந்த ஞானத்தினுல் ஆத்மவிசாரணை செய்யவும், அதனுண்மை யறியவும் கற்பித்து வருவதும் வழக்கம். அவ்வழக்கத்தால் ஸ்திரீகள் மகா ஞானிகளாய் விளங்கி வந்திருக்கின்றனர். அதுவுமன்றி சிறு பெண்களுக்கு நல்ல சமையல்செய்யவும், தையல், பூக்கோர்த்தல், பூவேலை முதலிய அற்புதமான கைத்தொழில்களும் செய்ய

* 'கவ்வில் + தான்'—என்று பிரிக்கவும்.

வும் கற்பித்துக் கொடுத்துவந்தார்கள். பெரும்பாலும் ஸ்திரீகளுக்கு எழுதவாவது படிக்கவாவது தெரியாது. அவர்கள் எல்லா விஷயங்களையும் பிறர் வாயாற்கேட்டு அறிவு அடைந்திருந்தனர். இவ்விதமான நன்னூற் கேள்வியே அறிவைப் பரவச்செய்வதற்கு முக்கியமான காரணமாய்த் தொன்றுதொட்டு இருந்துவருகிறது. இந்தியாவில் அனேக பெண்கள் எழுதப்படிக்கத் தெரியாமல் பிறர் சொல்லக்கேட்டு அபூர்வமும் அசாத்தியமுமான ஞானம் அடைந்திருக்கிறார்கள். சுருதியென்றால் கேட்கப்பட்டது என்று அருத்தம்.

இந்தியாவில் சில கிராமங்களில் சிறுபையன்கள் தங்கள் உபாத்தியாயரைச் சுற்றி உட்கார்ந்துகொண்டு அவர் சந்தை சொல்லத் தாங்கள் அதைத்திருப்பித் திருப்பி ஒப்புவித்துக் கொண்டு வேதங்களை மனனஞ் செய்வதை அனேகர் பார்த்திருக்கலாம். இதற்கு அத்தியயனமென்று பெயர். இச்சிறுவர்கள் அனேகமாய் எழுதப்படிக்க அறியாதவர்கள். இவர்கள் போன்று எழுதப்படிக்கத்தெரியாத வயது முதிர்ந்தவர்களும் வேதத்தைத் தலைகீழாக ஒரு மாத்திரை குறையாமலும் ஒரு மாத்திரை ஏறாமலும் பிழையின்றி ஒப்புவிப்பதையும் பார்த்திருக்கலாம். அவர்கள் அறிவையடையும் வழி யாதெனில் முதலில் எல்லாவற்றையும் உருவேற்றிப் பிறகு படித்ததை நினைத்துப் பார்த்து அதன்பொருளைப் பெரியோர் சொல்லக் கேட்டு அதை மனனஞ்செய்து முடிவில் வரம்பிலா ஞானமடைகிறார்கள். வழக்கமாக இவ்விதப் படிப்புத்தான் பெண்களுக்கு உண்டு. இதை அப்பியசித்து, இதனுடன் புருஷர்கள் வீட்டில் சம்பாஷணைகள் செய்வதைக்கேட்டு சிலர், புருஷர்களைக்காட்டிலும் மிக்க அறிவுடையார்களாய் எல்லாராலும் புகழப்பட்டு வந்திருக்கின்றனர்.

ஆனால் தற்காலத்தில் பெண்களுக்கு கல்விகற்றுக் கொடுக்கும் வழி யாவருக்கும் தெரிந்ததே. இப்பொழுது அனேக பெண்பாடசாலைகள் ஏற்பட்டு ஐரோப்பிய கல்வியைப் பெரும்பாலும் சிறுபெண்களுக்குக் கற்றுக்கொடுக்கிறார்கள். கல்கத்தாவில் ஒரு பெண்பாடசாலையில் 200 பிராமணப் பெண்கள் சமஸ்கிருதம், இங்கிலீஷ், எழுத்து, கணக்குமுதலிய கற்றுக்கொடுக்கப்படுகிறார்கள். அந்தப் பள்ளிக்கூடத்தை நடத்துகிறவள் ஒரு பிராமண ஸ்திரீ. அவளுக்கு 7 பாஷைகள் தெரியும். சமஸ்கிருதத்தில் மிக்க பாண்டித்தியம் பெற்றவள். அவளுக்கு உதவியாக சில உபாத்தியாயர்களும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களெல்லாம் ஸ்திரீகளே. மைசூர் அரசனும் அவரது மந்திரியும் ஆலோசனைசெய்து ஓர் நல்ல பெண்பாடசாலை ஏற்படுத்தி நடத்திவருகிறார்கள். இந்தியாவின் மற்ற பாகங்களிலும் இங்கிலீஷ் துரைத்தனத்தாரும் மற்ற சுதேச அரசர்களும் பெண் கல்வி பரவ வெகு சிரமமெடுத்துவருகின்றனர். பம்பாயில் வசிக்கும் பார்சி ஜாதியார் இதன் நிமித்தம் பிரயாசைப்பட்டு வருவதும் அனேகருக்குத் தெரிந்த விஷயம். இதுபோல முற்காலத்தில் பெண்பாடசாலைகளாவது, அவைகளை ஏற்படுத்தமுயன்ற அரசர்களாவது, சுதேசவாசிகளாவது இருந்ததில்லை. அப்படியிருந்தும் இக்காலத்துப் பெண்களைவிட அக்காலத்துப் பெண்கள் மிக்க கல்வித்திறமை படைத்தவர்களென்பதற்கு ஐயமில்லை.

முன்னமே ஸ்திரீகள் வேதம் ஒன்று தவிர மற்றவைகள் கற்றுவந்தார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்திரீகள் வேதம் படிப்பதிலிருந்து தள்ளுபடியானவர்கள் என்றாவது முற்றிலும் யோக்கியதையற்றவர்கள் என்றாவது சொல்வது பிசகு. ஏனெனில் முற்காலத்தில் சில ஸ்திரீகள் வேதத்தின் சில பாகங்களை சுதாவில் எழுதி கிரந்தகர்த்தாக்களாய் பூஜ்யதை யடைந்திருப்பது ஒன்று. இரண்டாவது ஆதிகாலந்தொட்டு ஸ்திரீகள் வேதம்படிக்கக்கூடாதென்பதைக்காணோம். மனுவானவர் நிருமித்த தர்ம சாஸ்திரத்தில் அது காணப்பட்டுளது. ஆனால் எல்லா ஸ்திரீகளும் விலக்கப்பட்டவர்கள் என்பதும் அதனால் நன்கு புலப்படவில்லை. வேதம் ஓதவல்ல புத்திக்கூர்மையும், மனவெழுச்சியும் உள்ள பெண்கள் படிப்பதற்குத் தடையொன்றுமில்லை. அந்தணர் நிரம்பிய சபையிற் சென்று வழக்கு முதலிய தீர்த்து, தத்துவத்தின் சிக்கலும் சந்தேகமுமான இடங்களுக்கு விளக்கமான பொருள்கூறி கீர்த்தி பெற்றிருந்த ஸ்திரீகளை வேதம் படிக்க லாயக்கற்றவர்களென்று விலக்குவது தர்மமாகாது. இன்னும் சிலர் சன்னியாசம் பூண்டு யோகிகளாய் யாவரும் வணங்கப் பெற்றிருந்தன ரென்பது புராணமூலமாய் நாம் அறிகிறோம். எந்த ஸ்திரீயானாலும் ஆத்மாவினுண்மையறிந்து பிர்ம்மஞானம்பெற்று அவைகளைப் பிறருக்கு உபதேசம் செய்யத்தக்க நுண்ணிய பேரறிவு அவளுக்கு உண்டாயிற்றோ அப்படிப்பட்டவளை உயர்ந்த குலத்தவர்களாகிய பிராமணர்களும் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்து உபசரிப்பார்கள்.

எம். எஸ். வேங்கசாமி ஐயர், பி. ஏ.

## இரண்டு சகோதரர்கள்.

### XI.

விசன்கரமானதை விஸ்தரிப்பது அனுவசியம். சாதாரணமாய்ப் பெண்குறங்கு ஒரு மரத்தினின்றும் மற்றொரு மரத்திற்குத் தாவும்போதுகூட அதன் குட்டியை நழுவவிடாமல் இடுப்பிலேயே சுமந்துகொண்டு காப்பாற்றுவதுபோல் அச்சிறுவனுடைய பெற்றோரும் மற்றோரும் நிமிஷநேரமேனும் அவனை தனித்திருக்கவிடாமல் இடுப்பிலும் தோளிலும் தூக்கிக்கொண்டு திரிவது வழக்கமாயிருந்தும் அன்று அவனுக்கு நேர்ந்த அகஸ்மாத்து மரணத்திற்குக்காரணம் இன்னதென்று சரியாய்த் தெரிந்துகொள்ள யாராலும் முடியாமற் போனதுதான் ஆச்சரியத்தைத் தரத்தக்கதாக விருக்கிறது. ஒருக்கால் விதிதான் காரணமோ? உடம்புக்கு யாதொரு கெடுதியும் வராமல் உயிர் அவ்வுடலை விட்டுப் பிரிவது ஸ்வபாவமாயிருந்தாலும் அதை ஒப்புக்கொள்ளலாம். இது எக்காலத்துமில்லை. மேலும் இந்த யாக்கை நீர்மேற் குமிழிபோல் நிலையற்றதாயினும் ஈற்றில் கண்ணுங்கருத்துமாய் அறியத்தக்க ஏதாவதொரு காரணங்கொண்டே முடிகிறதென்பது சுதரிசனமாய்த் தெரிந்திருக்கிறது. ஆதலின் யாவரும் ஒப்பத்தக்க யாதாமொருகாரணமுமின்றி ஒன்றுக்கொன்றுள்ள பேதாபேதத்தையும் பொருத்தநிமித்தத்தையும்பற்றி கிஞ்சித்தும் யோசியாமலே காஞ்சீபுரத்தில் கோபுரம் வீழ்ந்ததற்குக் காவேரிப்பாக்கத்தில் இடியிடித்ததுதான் காரணம் என்று சாதிக்கப் புகுந்தன்மைபோல் விதியைக்காரணமாகக் கூறுவது எவ்விதம் பொருந்தும். ஆகவே இதனை யுய்த்து நோக்குமிடத்து குப்புதாய் தான் காரணியாயிருக்கவேண்டுமென்று தெற்றெனப்புலப்படுகிறது. ஏற்கனவே முனியம்மாளும் முகூர்த்த நேரத்திற்குள்ளாகத்தானே காரணத்தை தோரணமாக வெளியிடப் புண்ணியங் கட்டிக்கொண்டனள். அவன் இறந்த அன்று யாவரும் அழுது அடங்கி தத்தம் மனைகட் கேகியபின்னர் அவள் தன்வீட்டில் இது விஷயத்தைப்பற்றி நினைத்து நினைத்து நெட்டுயிர்ப் பெறிந்து கண்ணீர் சொரிய, அப்போது தற்செயலாய் அங்கேவந்த அம்மாயம்மாள் என்பவள் ஒருவள் அவளுடைய முகக்குறிப்பை யறிந்து காரணமென்னவென்று கேட்டனள். இவளையும் சற்றேறக்குறைய முனியம்மாளுக்கு நிகராகச்சொல்லலாம். இருவரும் ஒரு வழிப்பட்டவரா யிருப்பதன்றியும் ஒருமனமும் பட்டவர்கள். இருந்தாலும் இவள் காதில் காற்றுப்போக்காய் ஏதாகிலும் ஒன்று விழுந்தால் அதை ஒன்றுக்குப் பத்தாகக்குறைந்தது நாலுபேரிடத்திலாவது சொல்லாமற் போவாளாயின் அதோடு அவளுக்கு ஊண் உறக்கம் முதலிய எதுவும் இல்லாதொழியும். திரிலோக வர்த்தமானியாகிய நாரதர் கலகம் செய்வதில் சிறந்தவரென முதலெண் முத்திராதானம் பெற்றவராயிருந்தும் ஒன்றைப்பத்தாகக் கொட்டியளக்கும் சக்தி அவருக்கில்லையாதலின் பார்க்கப்போனால் அவரையும் இவளுக்குச் சமானமாகச் சொல்லுவதற்கில்லை. இந்த உத்தமியிடத்தில் அவள் மனமோசன் கலியாணம்முதல், நடந்தவரை கதையைச் சாங்கோபாங்கமாயும் இரகஸ்யமாயும்சொல்லி முடித்தனள். இவள் சொன்னதையெல்லாம் பொறுமையோடு கேட்டுக்கொண்டிருந்து அவளை ஒருவாறு இதங்கூறித் தேற்றிவிட்டு இருப்பிடத்திற்குத் திரும்பினாள். பின்பு இரண்டு தினத்திற்குள்,

"மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந் தாங் கோடிப் பறக்கும்."

என்றபடி தெய்வமே நேர்நின்று தண்டோராமூலமாய்ப் பிரசித்தம் செய்ததுபோல் ஊர்முழுவதும் கொல்லென்றாய்விட்டது. அஃது யாதெனில்:—இராஜலெட்சுமி தன் புத்திராதியருடன் அடிக்கடி இவ்விடத்தில் முகாம் போட்டுக்கொண்டுவந்ததால் குப்புதாய் மனதின்கண் முன்னமே குடிகொண்டிருந்த அழுக்காறும் துயரமும் அவளைக்காணுந்தோறும் உள்ளிருந்து தூண்ட அது நாளாவர்த்தியில் மீதூறப்பெற்றவளாய் ஈற்றில் தன் மனக்கவலையை எவ்விதத்திலாவது அகற்றும்படி கன்னியம்மாளிடம் குறைகூறிமுறையிட்டனள். இதைக்கேட்டு அவளும் கவலைமிக்கவளாகி இதற்கு யாதுசெய்வதென்று முனியம்மாளுடன் சூழ்ச்சிசெய்ய, முனியம்மாளும் இதைக்குறித்து ஆழ அகல நேர்நிதானமாய் தீர்க்காலோசனை செய்து 'மாசிலாமணி திருவல்லிக்கேணியில் போய்ச்சேர்ந்ததால்தான் இராஜலெட்சுமி இவ்விடத்திற்குவரப்போக இருக்கிறாள். தரங்கவதியும் அவள் பிள்ளையின் நிமித்தம் கவையைப்பற்றி கழுதையையும் காலைப்பிடி என்பதற்கிணங்க அவள்பால் பட்சம் பாராட்டித்திரிகிறாள். ஆதலால் முதலில் மாசிலாமணியையே பைசல் செய்துவிட்டால் அதோடு தண்டாதீர்ந்து குளிரும்; காச்சலும் கூண்டோடேவிட்டுப்போகிறது' என்று இவ்விதம் தன் மேலான அபிப்பிராயத்தைத் தெரிவிக்க, அதுதான் யுக்தமென்று தீர்மானித்து அவ்விதமே செய்யும்படி கன்னியம்மாள் தன்பெண்ணிடம் சொல்லிவிட்டுப்போயினள். இப்படியிருக்கையில் மாசிலாமணி சென்னையினின்றும் வந்ததும் முனியம்மாள் குப்புதாய்க்கு உடந்தையாயிருந்து அவனைக்கொண்டு காப்பியில் விஷங்கலந்து அவனுக்குக்கொடுப்பிக்க அது அவர்கட்கே

பிரதிகூலமாய் முடிந்தது என்பதுதான். இச்செய்தி ஊரெங்கும் பரவியதென்றாலும் தெய்வநாயகம்பிள்ளையிடத்தும் மற்றும் அவ்வீட்டில் உள்ளவரிடத்தும் துணிந்துசொல்ல எவரும் முன்வராமற்போனதால் அவர்களைப் பிடித்த சமுசயம்மட்டும் விட்டுத்தொலையவில்லை. இது எங்கும் வழக்கந்தான். வாஸ்தவத்தில் குப்புதாய்க்கும் இதுவோ அல்லது மற்றும் எதுவோ என்ற சந்தேகமுண்டு. இருந்தாலும் அவளுடைய தீவினை அவளை பயப்பிராந்தியடையச்செய்தது.

முனியம்மாள் என்னதான் கொடியவளாயிருந்தாலும் கேவலம் இப்படி செய்யத் துணிவாளா என்று சிலர் சமுசயிக்கக்கூடும். உருசிகண்ட பூனையைப்போல் தினந்தோறும் இங்கேவந்து கார்க்கப் புளிக்கத்தின்று காலங்கழித்துக்கொண்டுவந்த அவள் வாயில் முன்னால் மாசிலாமணி மண்ணைப்போட எண்ணங்கொண்டது எல்லாருக்குந் தெரிந்திருக்கிறது. ஒருக்கால் அந்த விரோதத்தையே மனதில் வைத்திருந்து வாய்த்தசமயத்தை தப்பவிடப்போகாதெனக் கருதி இச்சதியாலோசனை செய்திருந்தாலாகாதா? ஆதலால் இது அதிசயமன்று.

"குற்றமுள்ள நெஞ்சு குருகுரு என்னும் குறும்பியுள்ள காது தினவு தின்னும்" என்ற பழமொழிப்படி குப்புதாய் இரண்டு பேருக்கதிகமாய்ச் சேர்ந்துள்ள எந்தக் கூட்டத்தைக் கண்டாலும் இவர்கள் தன்னுடைய நடவடிக்கையைப் பற்றித்தான் பேசுகின்றனரோ என்னவோ என்ற சந்தேகமும் அச்சமும் உண்டாய்விடும். இவ்வண்ணமிருக்கையில் ஒருநாள் அவ்வூர் தாங்கலில் ஸ்நானஞ்செய்து கொண்டிருந்த ஸ்திரீகளில் ஒருத்தி 'தண்ணிகெட்டு போச்சி. பாழும்மானம் இடிந்துவிழுந்தாக்கா ஜலசவுக்கிய முண்டாகும்' என, மற்றொருவள் 'அக்கிரமம் மிதமிஞ்சிய இந்தக்காலத்தில் மழையேன் பெய்யும். மாமனுருக்கும் மைத்துனனுக்கும் மருந்து கொடுத்துக் கொல்லுவது நமக்குள்தான் பாலும் பழமும் சாப்பிடுவதுபோல் சாதாரணமாய்ப் போச்சே' என்று இவ்வாறு சந்தடி சாக்கில் வந்தது வரட்டுமென்று துணிந்துசொன்னாள். அப்போது குப்புதாய் எங்கேயும் தூரப்போய்விடவில்லை. பக்கத்துத் துறையில்தான் நின்றுபல்தேய்த்துக்கொண்டிருந்தாள். ஈயத்தைக்காய்ச்சி விட்டதுபோல் இச்சொற்கள் அவள் செவியிற் பட்டமாத்திரத்தில் உரோமஞ்சிலிர்ப்ப மனந்திடுக்கிட்டு மீண்டும் அவர்களை ஏறிட்டுப்பார்க்கவும் சவகாசமின்றி வந்த வேலையை அனமட்டில் முடித்துக்கொண்டு அக்கணமே அவ்விடம் விட்டகன்றனள்.



வீட்டுக்கு வந்தபின்பு அங்கேயும் எதின்பேரிலும் சருத்து நாடவில்லை. ஏனெனில் தாங்கலில் திருச்செவி சார்த்திய சொற்கள் பெரிய வாள்பூட்டியறுப்பதுபோல் அவள் மனதை யறுத்துக்கொண்டிருந்தது. உடனே முனியம்மாளிடம் ஆறுமுகனை அனுப்பினாள். அவள் வந்த பிறகு இருவருக்கும் நடந்த இரகஸ்யமான சம்பாஷணையாவது:—

முனியம்மாள்.—என்ன செல்லம்! ஏன் வரச்சொன்னியாமே?

குப்புதாய்.—நாம் பெத்தபலன் இந்தமட்'லேபோதும். எங்கையும் வெளியிலே தலைகாட்ட படல்லே.

முனியம்மாள்.—அதேன் அப்பிடி.

குப்புதாய்.—நடந்த சங்கதியே நீ எங்கேயானுசொல்லியிருப்பையோ?

முனியம்மாள்.—உனக்கு கலவரமா என்ன. இல்லாதேபோனு கெனவு கண்டாயா? இந்தபேச்சியேகூடவெளியிலே சொன்னால் அப்புறம் தலை தப்புமா?

குப்புதாய்.—பின்னே எப்படி ஆயா இது வெளிவந்தது.

முனியம்மாள்.—இப்போ என்ன தெரிஞ்சிபோச்சி என்கிறாய்.

குப்புதாய்.—வெளியிலே எங்கே பார்த்தாலும் இந்த பேச்சிதான் பேச்சாயிருக்குது. தலையைக்காட்டினால் சாக்கிட்டு சாக்கிட்டு என்னென்னமோ சொல்'றாங்க.

முனியம்மாள்.—ஊரெண்ணிருந்தால் நாலும் நாலு பேச்சுதான்சொல்லும். உலைவாயை மூடினாலும் ஊர்வாயை மூடலாமா? அதுக்கெல்லாம் பார்த்தால் முடியுமா? அண்ணைக்கி பையனை அவனிடம் போகவொட்டாமல் பாத்துகொண்டாக்கா சனியன் ஒரேவழியாய் தொலைஞ்சிபோயிருக்குமே. என்னமோ போனதுபோச்சி.

குப்புதாய்.—இப்பிடி வருமெண்ணு தெரியாதே போச்சி ஆயா. அவன் பாட்டியின் பின்னாலே போய்விட்டானே என்று களங்கமில்லாமல் இருந்துவிட்டேன்.

முனியம்மாள்:—என் தங்கமே! ஏன் அழுகிறாய். அழவேண்டாம். இப்போதான் என்னபோச்சி. நீ சும்மாயிரு கையுங் களவுமாய் கண்டுபிடிப்பதெல்லாம் எப்பிடி எப்பிடியோ போகுது. அப்பிடியிருக்க சாக்கிட்டுச் சொல்லுகிறது என்ன

செய்துவிடும். யார் என்னசொன்னாலும் நம மையல்லா எண்ணு நினைத்துகொண்டு நீ சும்மா இரு. இல்லாதே போனுக்கா உன்னாலேயே குட்டு வெளிப்பட்டுவிடும். எதுக்கும் நானிருக்கேன். பாத்துக்கொள்’றேன்.

## XII.

அபயமென்று அடைக்கலம் புகுந்தவரை தற்காத்தருளும் தயாபரியாகிய முனியம்மாள் தன்னையடுத்த குப்புதாயை ஈடேற்றக்கருதி, இம்மையில் இஷ்டபோக்சுகத்தையும், மறுமையில் சாயுச்சிய சாம்பராச்சியத்தையும் அளிக்கவல்ல அஷ்டாட்சரம் பஞ்சாட்சரம் பீஜாட்சரம் என்னும் இவைபோன்ற மந்திரங்களைக்காட்டிலும் சிறந்ததான இம்மூலமந்திரத்தை அவள் காதில் ஓதிக்கொண்டிருக்கையில் தரங்கவதி யமனைப்போல் எதிரில் வரக்கண்டனள். காண்டலும் இருவரும் இந்தக் கதையை தொங்கலில்விட்டு புத்திரன் கதையை எடுத்துக்கொண்டு புலம்பலானார்கள்.

குப்புதாய் பயந்ததற்குக் காரணம் அவளுடைய கெட்ட நடவடிக்கையால் அவளுக்கு துன்மார்க்கி என்ற பெயர் வந்தெய்தியதற்காகவல்ல. எங்கே நாளடைவில் இந்த விஷயம் வெளிவந்து தன்தலைக்கு தீம்புவருகிறதோ என்று பிராணனுக்குப் பயந்துதான். அம்ம! தெய்வத்திற்கும் மானஈனத்திற்கும் பயந்து நிர்த்துஷ்டமான நடத்தையுடன் காலக்கழிவு செய்யவேண்டுமென்ற நன்னோக்கம் அவளுக்கிருக்கும்பட்சத்தில் கதை இவ்வளவுதூரத்திற்கேன் வளர்கிறது.

சிலநாட் கழிந்தபின்பு மனமோகன் ஏதோ ஒரு காரியார்த்தமாக குப்பத்திற்குப்போனான். அப்போது அங்கே முனியம்மாள் வீட்டில் அவனுக்கும் முனியம்மாளுக்கும் நடந்த சம்பாஷணையையும் தெரிந்துகொள்ளவேண்டியது ஆவசியகமாயிருப்பதால் அதை ஈண்டு விவகரிக்கப் புகுந்தனம்.

முனியம்மாள்.—தம்பி! வாபோறாய். ஒரு சமாசாரம். இதோ இந்தா மணைமேலே உட்காரு.

மனமோகன்.—என்ன பாட்டி. ஏன் கூப்பிட்டாய் சொல், போகவேணும்.

முனியம்.—சேனேநாளா உன்னே ஒரு சங்கதி கேக்க வேணுமென்று எண்ணம். நீ எங்கே கண்ணிலே ஆப்பட்’றையா?

மனமோ.—எனக்கு எங்கெங்கேயோ அலைச்சல். என்னவிசேஷம்.

முனியம்.—நான் அதே என்’ண்ணு சொல்’றது. கேட்டநாள் முதல் மெல்லவுமாட்டாமல் முழுங்கவும் மாட்டாமல் அடக்கிக்கிண்டிருக்கேன். அது உனக்கும் ஒருவேளே தெரிஞ்சிருக்குமோ என்னமோ எண்ணு சந்தேகம்.

மனமோ.—எனக்கொன்றுந் தோன்றவில்லை.

முனியம்.—நீ குழந்தையா யிருந்தபோது உன்னே என் கண்ணுக்குக் கண்ணாக நினைத்து நான் வளத்த வளர்ப்பைப்பத்தி உனக்கு கியாபகம் இல்லாதேபோனாலும் விசாரிச்சிபாத்தால் தெரியும். என் புள்ளேங்க என்னே பண்’ன சதிக்கி என்னே எடுத்துப்போட நீதானிருக்கா யெண்ணு நாளேக்கும் நினைச்சிக்கிண்டிருக்கேன். அப்புறம் வந்து உன் கால்லேபட்டால் என் கண்ணிலே பட்’ற மாதிரியாயிருக்குது.

மனமோ.—அதெல்லாம் சரிதான் பாட்டி. உன்னே யார் என்னசெய்தது சங்கதியைச்சொல்.

முனியம்.—சாமி புண்ணியத்திலே நீநல்லாயிருக்கிறவரையிலே எனக்கென்ன குறைச்சல். நான் எப்பிடி வாய்விட்டு சொல்’றது. எனக்கு மனம் வல்லே. ‘மல்லாந்து உமிஞ்சால் மார்மேலே’ ’ண்ணு, எல்லாம் ஒண்ணுக்கொண்ணுயிருக்குதே. அப்புறம் வந்து எப்படிபோய் எப்பிடி முடியுமோ ’ண்ணுதான் பயமாயிருக்குது. இர்’ந்தாலும் உன்னேயும் ஒருத்தன் கெடுக்கப்பா’க்கிற மட்’லே அதே கேட்டுக்கிண்டிருக்க மனந்தாளவில்லே.

மனமோ.—என்பேரில் யாருக்கென்ன விரோதம். பாதகமில்லை; சும்மாசொல் பாட்டி. அதற்காக நீ யேன் அழுகிறாய்?

முனியம்.—‘அள்ளாதே கொறையாது சொல்லாதே பொறக்காது’ என்பாங்க: ஏதோ கொஞ்சமிருந்தால்தான் சங்கதிவெளிவரும்! என்னமோ போனதுபோச்சி. உன் பிராணனையாவது ஜாக்கிரதையாயிருந்து காப்பாத்திக்கொள்வாயெண்ணுதான் இத்தினிதூரம் சொல்’றேன்.

மனமோ.—அதெல்லாம் கிடந்து நாறுகிறது. நீ கூப்பிட்ட சங்கதி என்னசொல் பாட்டி?

முனியம்.—பகல் பக்கம்பாத்துபேசு என்பாங்க. என் கூச்சல்போடுறாய் மெதுவாய் சொல்லு. ஒருவேளே நான் சொல்லிவிட்டால் அப்புறம் நீதானே சொன்னாப் ரூபி ’ண்ணு என்னே பிடிச்சிக்கிட்டு வம்பு கொடுத்தால் நான் என்னா

த்தைபண்’றது. அங்கங்கே கொளறிவழிகிறசங்கதியைத்தான் உன்னைக் கேட்கிறேன். பையன் செத்துப்போனதுக்கு என்னமோ உன் தம்பி மேலே பழிசொல்’றாங்களே. அது நிஜமாயிருக்குமா? என்ன யோசிக்கிறாய்.

மனமோ.—உனக்கு யார் சொன்னது. இது உண்மையாயிருக்குமா?

முனியம்.—அப்பா நான் என்னத்தை சொல்றது. நானும் சந்தேகப்பட்டுத்தான் உன்னை கேட்கிறேன். ஐயோ! இந்த சங்கதி ஒருவேளே உன் காதுக்கும் எட்டியிருக்குமோ என்னமோ ’ண்ணு நினைச்சி அல்லோ உன்னைக்கேட்டேன்.

மனமோ.—யாரும் சொல்லாமல் உனக்கெப்படி தெரிந்தது.

முனியம்.—ஊரெல்லாந்தான் கொளறிவழியுது. எங்கேகண்டாலும் கூட்டங் கூடிக்கூடி பேசறாங்க. ஆனால் பாபமோ தோஷமோ எனக்கென்ன உனக்கென்ன ’ண்ணிருக்கிறாங்களே தவிர யாரும் நான் கண்டேன் நீ கண்டே ’ண்ணு சொல்லுவாரில்லே. இப்படிபட்டத்துக்கெல்லாம் நான்தான் ’ண்ணுயாராவது முன் வருவாங்களா?

மனமோ.—குழந்தை என்ன செய்தான். அவன்பேரில் அவனுக்கென்ன விரோதம், இதை நம்புவதற்குக் கூடுமா?

முனியம்.—அதென்னமோ, பாவமோ புண்ணியமோ அதோ எறிஞ்சிகிண்டு போறவனுக்குத் தெரியும். கொளறி வழிகிறதைத்தான் கண்டேன்.

மனமோ.—அதாவது எப்படி கொன்றானும்?

முனியம்.—குப்புதாய் அண்ணைக்கி காப்பியோ என்னமோ கொண்டுபோய் அவனிடம் வைத்தாளாம். அதில் விஷங்கலந்து கொடுத்ததா சொல்லிக்கொள்’றாங்க. நிச்சயமாய் சொல்ல நாம் என்ன கண்ணாலேயா கண்டோம். கட்டிக்கிண்ட பாவமெல்லாம் போதாதா?

மனமோ.—பாட்டி! இது உண்மையாயிருக்குமா?

முனியம்.—பொய்யாய்ப் போகவேணுமென்பது தான் என்கோறிக்கையும். குழந்தையினிடத்தில் அவன் வைச்சிக்கிண்டிருந்த ஆசைக்கி அப்பிடி நினைக்கிறத்துக்கு இல்லே தான். எதுக்கும் குப்புதாயைக் கேட்டால் சந்தேகந் தீரும். நானும் அவளே கேட்டுபோக்கலாமென்றிருக்கேன். அவளைக்கேட்டால் அப்புறம் அவள் வயிறெரிஞ்சு என்ன என்ன செய்வாளோ ’ண்ணு அதொரு பக்கம் பயமாயிருக்குது. எப்படியிருந்தாலும் நீ பதறி ஒண்ணுஞ் செய்யாதே.

மனமோ.—அவளை என்னவென்று கேட்பது.

முனியம்.—இந்த மாதிரியாக காப்பி கொண்டுபோய் வைத்ததுண்டா இல்லேயா? அப்போ பையன் எங்கேயிருந்தான்; அதே அவன் குடிச்சிருப்பானா ’ண்ணுதான். இந்த விஷயத்தேமட்டும் அவளுக்கு சொல்லாமே உன் மனசிலேயே வைத்திரு. அப்பறம்வந்து ‘பாவி இப்பிடி பண்ணுனே’ ’ண்ணு வயித்திலும் வாயிலும் அடிச்சிக்கிட்டு தெருவுக்கு வந்துவிடப் போறாள். உனக்குத் தெரியாததா? எப்படி யோசனேயோ அப்படிசெய். ஆனால் இன்னொண்ணு. இது உண்மையா யிருக்கும்பட்சத்திலே இதுக்கு துணிஞ்சவன் பின்னே எதுக்கு துணியமாட்டான். ஆகச்சே உன் பிராணனே காப்பாத்திக்கொள்.

மனமோ.—இருக்கட்டும் பாட்டி நான் வருகிறேன்.

முனியம்.—சரி அப்பிடித்தான்செய். என்பேரை வெளிக்கு காட்டாதே; அவங்கோ இவங்கோ பேசிக்கொள்றதே உன்னே கேட்டேன்.

சகோதரர் இருவர்க்கும் உள்ள விஸ்வாசம் இத்தன்மைத்தென்று அளவிடற்பாலதன்று. மாசிலாமணி இவனை தன் தந்தைக்குச் சமானமாக மதித்து இவன் ஏவுந்தொழிலைப் புரிவதிலும், சமயோசிதமறிந்து இவன் கருத்தின் வழிப்பட்டும் கட்டளையிடும் வண்ணமும் நடப்பதிலும் எட்டுணையும் பிசகினதே கிடையாது. ஒவ்வொரு வேளையில் இவனுடைய ஒழுக்கந் தீயதென்று கண்டாலும் அப்போதைக்கு அதற்கு அனுசரணையாகவே நடந்து பின்பு சமயம் வாய்ப்புழி அத் துர்வழியினின்றும் இவனை விலக்கமுயலுவான். அவனுடைய குணத்தையும் ஒழுக்கத்தையும் இவன் செவ்வேயுணர்ந்திருத்தலாலும் அவன்மீதுள்ள அன்பின் மிகுதியாலும் இவனுக்கு எதிலும் நம்பிக்கையுண்டாகவில்லே. “இது நீர் இது நெருப்பு என்பதையும் செவ்வையாய்த் தெரிந்துகொள்ளவறியாத அக் குழந்தையினிடத்து முதலில் இவன் வைத்திருந்த ஆசையை மறந்து பின்பு அவனைக்கொல்ல நினைத்தவாறென்னை? அவன்மீது மனவருத்தமுண்டானதற்குக் காரணம் யாதாயிருக்கக்கூடும். ஒருக்கால் முனியம்மாள் வேண்டுமென்றே இவன்மீது இப்பழியைச் சுமத்தியிருப்பாளா? அதற்காவது இவர்கள் இருவர்க்கும் என்னவிரோதம். ஒன்றுங்காணேம். மே

லும் நாளதுவரை அவன் இறந்ததற்குக் காரணமும் இன்னதென்று திட்டமாய்த் தெரியவில்லை. முனியம்மாள் சொன்னது உண்மையா யிருக்கும்பட்சத்தில் இப்போது மாட்டைப் பிடித்தது நாளைக்கு மனிதனையும் பிடிப்பதற்குத் தடையென்ன. ஆதலால் இதன் உண்மையை ஆராய்ந்தறிவதே தகுதி" என்று கடைசியாக இவ்வாறு தீர்மானித்து, இதைப்பற்றி முதன் முதல் ஒருநாள் ராத்திரி படுக்கையறையில் தன்மனைவியைக் கேட்டனன்.

மனமோகன் கேட்டகேள்வியையும், அதற்கு அவள் ஒன்றுமே அறியாதவள்போல் நடித்த நடிப்பையும் பின்பு சொன்ன மறுமொழியையும் அவ்வாறே இவண் வரைய எமது இறகு ஓடவில்லை.

---

## XIII.

குப்புதாய்க்கு இத்தகைய விஷயங்களில் முதுகு கொடுத்து சமாளிக்க அவ்வளவு அனுபவ முதிர்ச்சியில்லாவிட்டாலும், இவை எல்லாவற்றிலும் குட்டுப்பட்டுத்தேர்ந்தவளான முனியம்மாள் சொல்லிக்கொடுத்தது அவளுக்கும் உண்டு அவளை நத்தினவர்க்கும் உண்டு. இந்த சம்பாஷணையும் முன்னர் முனியம்மாளுக்கும் இவனுக்கும் நடந்த சம்பாஷணையின் மோஸ்தரேதான். ஆனால் இதில் நூதனமாய்ச் சேர்க்கப்பட்ட விஷயம் யாதெனில்:—மாசிலாமணி இவண் வந்திருந்த காலையில் ஒருநாள் அவன் வரம்புகடந்து அவளிடத்துச் சொல்லாதவார்த்தை சொல்லிப்பேசினதாகவும், அதன்மேல் அவள் மனம்பொறுமல் பதறி சமீபத்திருந்த குழந்தையின் தலையிலடித்துச் சத்தியஞ்செய்து மறுமொழி சொன்னதால் அவனுக்குக்கோபாவேசமுண்டாய் அப்பிள்ளையைச் சுட்டிக்காட்டி 'அதின் தலையிலடித்துச் சத்தியம் செய்தையே இன்னும் இரண்டொரு தினத்திற்குள் அப்பிள்ளை உனக்கு உதவாமற்போகிறதுபார்' என்று சபதங்கூறிப்போயினன் என்பது மாத்திரந்தான். இதில் எது மெய்யோ எது பொய்யோ அது ஆண்டவனுக்கே அற்புதம். மனமோகனும் வஞ்சனையில்லை. அவனுக்குச் சமுசயமாய்த்தோன்றிய ஒவ்வொன்றுக்கும் சவால்போட்டுக் கொண்டு தான் வந்தான். மலைமுழுங்கி மாரியாத்தாளுக்கு மற்றது ஒரு பெரிதா. திருடக்கற்றவளுக்குப் பதுங்கத்தெரியாதா? அவனுடைய சவாலுக்குச் சரியான ஜவாப்பு கொடுத்துக் கொண்டுவந்ததோடு அவள் செய்த சாஹசத்தையும் கண்ட அவன் அப்படியே அசந்துபோய் விட்டான். இது தான் உண்மையென்பது தவிர மற்றெதுவும் அவனுக்குத் தோன்றவில்லை. அவனுடைய உள்ளக்குறிப்பை யறிந்துகொண்ட பின்பு அவள் ஒரே அடியாய் இனி யோசனை என்ன இதை ருசுப்படுத்துவதோ அல்லது பழிக்குப் பழி வாங்குவதோ இரண்டிலொன்று செய்யாமற் போவாயாயின் என்னுடைய பிராணனையும் வைத்துக்கொண்டிரேன் என, அவன் 'எல்லாம் எனக்குத்தெரியும். நீ சும்மென்றிரு. நான் சங்கதி சொல்லுகிறேன்.' என்று அவளை அடக்கிவிட்டு இராத்திரி முழுவதும் தூக்கமின்றி இதே ஏக்கத்திலாழ்ந்து கிடந்தனன்.

அன்றிரவில் இவர்கள் இருவரும் இவ்விதம் ஒருவர் காதில் ஒருவர் தலையணை மந்திரோபதேசம் செய்துகொண்டிருந்தபோது, குப்புதாய் அடிக்கடி பெருமூச்சுவிட்டுக்கொண்டு அங்கலாய்த்ததும் அழத்தொடங்கினதும் மனமோகன் அவளுக்குப் பிரியவசனமும் தைரியமும் கூறித்தேற்றினதும் கொஞ்சம் சந்தடிக்கு இடம் கொடுத்ததால், அது தாங்கவதி காதுக்கு எப்படியோ எட்டிவிட்டது. நடந்த சங்கதி இன்னதென்று அவளுக்குத் தெரியாமற் போனபோதிலும் வேறொருவிஷயத்தில் அவள் வெகு நாளாய் கலவரப்பட்டுக் கொண்டிருந்ததால் அதைப்பற்றித்தான் ஏதோ கலகம் நடக்கிறதென்று கண்டிப்பாய்த் தீர்மானித்தாள். அஃதுயாதெனில்:—தன்னிடத்துள்ள திறவுகோலை குப்புதாய் வாங்கிக்கொண்டு வீட்டில் எல்லாவற்றிற்கும் அவளே ஆதிபத்தியம் கட்டிக்கொள்ள எண்ணங் கொண்டிருக்கிறாள் என்பதே. கொஞ்ச காலத்திற்குமுன் ஓர் ஊரில் ஒரு கிழவி இருந்தாள். அவள் ஒருநாள் குளத்தினின்றும் ஸ்நானம் செய்துவிட்டு வீட்டுக்குத்திரும்பி வருகையில், வழியில் ஒரு பரதேசியைக்கண்டு "என்னையா நம்மவூட்ளே பிச்சேபோட்டளா" என்று அவனைக் கேட்க அவன் வீட்டில் உங்கள் நாட்டுப்பெண் இல்லையென்று சொல்விட்டாள் என்றான். இதைச்சொல்லி அவன் வாய் மூடாமுன்னமே அவள் கண்களில் தீப்பொறிபறக்க மிக்க கோபத்துடன் "என்னையா உனக்கு கியானமில்லே. எதுக்கும் நான் ஒருத்தி மேலேயிருக்கும்போது அவள் சொன்னாளென்று அவள் பேச்சியே கேட்டுக்கிண்டு நீ எப்பிடிவந்தே. வா ஐயா வீட்டண்டை" என்று அவனை யழைக்க, அவன் "பிச்சைப் புக்குண்பான் பிளிறுமை முன்னினிதே" என்றபடி இவளுடன் நாமும் கோபித்துக்கொள்வது தகுதியல்ல. முக்கியமாய் குருடனுக்கு வேண்டியது கண். எப்படியாவது அட்சயபாத்திரம் நிரம்பினால் போதுமென்று எண்ணிக்கொண்டு அவள் பின்னாகத்தானே வீட்டுக்குப்போனான். அங்கே போனபிறகு அவள் "நாளைமுதற்கொண்டு இங்கே வந்தால் போனால் ஞாபகமிருக்கட்டும். வீட்டில் நானொருத்தி யிருக்கும்

போது உண்டென்றுவது இல்லையென்றுவது சொல் லுவதற்கு நேத்துவந்த அவளுக்கென்ன அதிகாரம். இப்போது அந்த பேச்சியை (அதாவது போய்வா இல்லையென்று) நான்தான் சொல்லுகிறேன், போய் வா" என்று அவனுக்குப் புத்திசொல்லி வழிவிட்ட தாக ஒரு கதையுண்டு. அதைப்போல், தரங்கவதிக் கும் அவள் மருமகளுக்கும் குணத்திலும் நடையுடை பாவனையிலும் யாதொரு பேதமுமின்றி இருவரும் ஒரேவழிப்பட்டவராயிருந்தாலும், குடும்பத்தில் சர் வாதிகாரமும் தன்னுடையதாகவே இருக்கவேண்டும்; அதை வேறொருத்தருக்கும் விட்டுவைக்கக்கூடாது; என்பது அவளுடைய முக்கியமான கோரிக்கைகளில் ஒன்றாயிருந்ததால் அந்த பாபத்தில் மாத்திரந்தான் இருவருக்கும் பொருத்தம் கிடையாது. எது எப்படி போனாலும் தினந்தோறும் குப்புதாய் அவளுடைய கட்டளைக்குப் பொறுமையோடு எதிர்பார்த்துக்கொ ண்டிருந்து அதின் பிரகாரமே நடந்துகொண்டால் அதுவே அவளுக்குப் போதுமானது. முன்னால் அவள் தன் கணவனோடு எதிர்வாத மிட்டதெல்லாம் கூடி இதற்காகத்தானே. உண்மையில் குப்புதாயும் கணக்காய் முதலில் மூன்றுநாள்வரை அவள் கொ ண்ட கருத்தின் வண்ணமேதான் இருந்தாள். அப் புறம் நாளாவட்டத்தில் இந்த வழக்கம் எடுபட்டுப் போகவே அவளுக்கு இதே மனக்குறையாய்விட்டது.

போதாக்குறைக்கு மனமோகனும் அவன் மனைவி யும் கூடிப்பேசிக்கொண்ட சப்தத்தையும் கேட்கவுந் தான் 'எல்லாம்போய் நம் கையில் இந்த சாவியிருப் பதுகூட அவள் மனம் ஒப்பவில்லையாக்கும். அந்தோ, இதுவும் போய்விட்டால் அப்புறம் நாமிருப்பது எதற் காக' என்று எண்ணிக்கொண்டு மனமோகனைப்போ லவே அவளும் ராத்திரி முழுவதும் அதே நிலைமை யில்தான் இருந்தாள். என்னசெய்வாள் பாவம். குப்பு தாயைப்போல் அவளும் தன் புருஷனிடத்தில் இதை ப்பற்றி குறைகூறி முறையிடவும் முகத்தில் பவி ஷில்லை. புத்திரனையாவது மருமகளையாவது கண்டி ப்பதற்கும் சரிப்படவில்லை. நாலாவழியிலும் இப் படி திண்டாடநேர்ந்ததால் கடைசியில் அவலைச்சாக் கிட்டு உறலையிடிக்குந் தன்மைபோல் குப்புதாயைச் சாக்கிட்டு குற்றப்பாடாய் வசவுகளை வாரியிறைக்க த்தலைப்பட்டாள். குப்புதாய்க்கு இந்த சங்கதிதெரி ந்து அவள் இதைப்பற்றி மறுமுறைப்படி எல்லாவற் றிற்கும் தனக்குக் காரணபூதனாயுள்ள தன் புருஷ னிடத்தில் சொல்லிக்கொள்ள, அவன் 'இதேது யாரை ப்பார்த்தாலும் இவள்மேலேயே திரும்புகிறார்கள். வந்தது வரட்டுமென்று இதையெல்லாம் சமாளிக்க வும் இவளுக்குத் திறமையில்லை. ஆதலால் இச்சம யம் நாமும் ஏனோதானோவென்றிருப்பது சரியல்ல' என்றெண்ணி அவளிடமிருந்து வகாலத்து வாங்கிக் கொண்டு அவளுக்குப் பதிலாக எல்லாவற்றிற்கும் நான் தான் என்று முன்னின்றான்.

(இன்னும்வரும்.)

நே. சீதாராம நாயுடு.

---

# ஒருதாரத்தா செய்த தீர்மானம்
## அல்லது
# தங்கம்மாள் தலைவிதி.

### XIV.

அமீனாபுகுந்த வீடும், ஆமைபுகுந்த வீடும் இயமன் புகுந்த வீட்டுக்குச் சமானமல்லவா. ஜப்திக்குவந்த தினமுதல் சுப்பய்யர் வீட்டில் லட்சுமிகலைபோய்விட் டது. பாட்டியாருக்கு மன எழுச்சி இன்றி, பிரமை பிடித்தாற்போல் ஆகிவிட்டாள். வேளாவேளையில் ஆகாரமின்றி, ஏக்கம்பிடித்து, 'தங்கம்மாளுக்குக் கலி யாணஞ்செய்வித்துப் பாராமல் இறந்துபோவேன் போலிருக்கிறதே. தெய்வத்துக்குக் கிருபைவரவில் லையே, நிச்சயமாகிய வரனும் தட்டிப்போயிற்றே. இனிமேல் என்ன செய்கிறது' என்ற விசாரம் உயி ர்க்குலையைப் பிடித்துவிட்டது. யமதூதர்கள் வந்து விட்டுப்போய் பத்துநாளிருக்கலாம். ஒருநாள் சமை த்துக்கொண்டிருக்கும்பொழுது, கிரு, கிரு என்று தலைசுற்றி நிற்கமுடியாமல், பூஜைக்கு தீபம் ஏற்றிக் கொண்டிருந்த தங்கம்மாளைக் கூப்பிட்டு, "அடியே தங்கம், என்னமோ மயக்கமாய் வருகிறது, நான் போய் சற்று படுத்துக்கொள்ளுகிறேன். அடுப்பில் வேகும் கறியை, தாளித்துக்கொட்டி இறக்கு" என்று சொல்லி, போய்ப்படுத்தாள். தங்கம்மாள் சமையலை முடித்து, எல்லாவற்றையும் மூடி வைத்துவிட்டு, பாட்டியைத்தொட்டுக் கூப்பிட்டாள். பாட்டியார் ஏன் என்று கேட்கவில்லை. பயந்து, நடுநடுங்கி, ஓடி, இராமாயணம் பாராயணம் செய்துகொண்டிருந்த தகப்பனாரை "அப்பா, அப்பா, ஓடிவாரும், அப்பு றம், படிக்கலாம், பாட்டி ஏதோ மயக்கமாய் கூப்பி டக் கூப்பிட பதிலில்லாமல், படுத்திருக்கிறாள்" என்று உரக்க அழைத்தாள். ஏட்டை அப்படி எறிந்துவிட்டு, "என்னென்ன கஷ்டம் வரப் றதோ. எதுவந்தாலும் நாம் மனுஷியன் யலாம். 'ஈசுவரோ சம்ரக்ஷிது'" என் கொண்டு கிட்டேவந்து "அம்மா

கூப்பிட்டு கண்திறவாமலும் வாய் பேசாமலுமிருப்பதைக்கண்டு,

சுப்பய்யர்.—“தங்கம், பாட்டி எப்போ படுத்துக்கொண்டாள்.”

தங்கம்.—“ஒரு நாழிகை இருக்கும்.”

சுப்பய்யர்.—“இராத்திரி ஏதாகிலும் பலகாரம் செய்தாளோ.”

தங்கம்.—“பத்துநாளாய் இராத்திரி பலகாரம் செய்கிறதில்லை.”

சுப்பய்யர்.—ஏன்? உனக்குத்தெரியுமா.

தங்கம்.—நான்கூட தோசைக்கு அரைத்துக்கொடுக்கிறேனென்று சொன்னேன். பசியில்லை வேண்டாமென்று சொல்லிவிட்டாள்.

சுப்பய்யர்.—நீ ஏன் என்னொடே சொல்லவில்லை.

தங்கம்.—நீர் கேட்கவில்லை, நானும் சொல்லவில்லை.

ஒருவேளை பசி மூர்ச்சை களையாயிருக்கலாம் என்று கொஞ்சம் தீர்த்தமும் ரஸமன்னமும் கொண்டுவரச்சொல்லி மெல்ல அசைத்து, அம்மாவின் தலையை மடியில்வைத்துக்கொண்டு, முகத்தில் தீர்த்தத்தை அடித்தார். அடிக்கவே அவள் கண்விழித்துப்பார்த்தாள். “அம்மா உடம்பு என்ன. ஏன் இவ்வளவு களைப்பு” என “உடம்பு ஒன்றுமில்லை. என்னமோ கொஞ்சம் மயக்கமாயிருக்கிறது” என்றாள்.

சுப்பய்யர்.—மயக்கமல்ல, பசி மூர்ச்சை; இதோ கிண்ணத்தில் ரஸமும் அன்னமுமிருக்கிறது, கொஞ்சம் சாப்பிடு.

பாட்டி.—பூஜையாய்விட்டதோ, நீங்களெல்லாரும் சாப்பிட்டாய்விட்டதோ.

சுப்பய்யர்.—பூஜை அப்புறம் செய்து கொள்ளுகிறேன். இப்போ உன்னுடைய களைதீரட்டும்.

பாட்டி.—சமையலானதும் ஆகாததுமாய், தெய்வத்தையும், குழந்தைகளையும் பட்டினியாய் வைத்துவிட்டு, நான் முதல் முதல் கொட்டிக்கமாட்டேன்.

சுப்பய்யர்.—அசக்தியான காலத்திற்கு தோஷமில்லை. சுவாமிக்குவேறு நைவேத்தியம் செய்யச்சொல்லுகிறேன் பாதகமில்லை.

பாட்டி.—எனக்கு மயக்கந்தெளிந்துபோயிற்று. அப்படி ஒன்றும் தப்பித்தவறி இயமன்வந்து என்னைக்கொண்டுபோய்விடமாட்டான். அவனுக்கு இந்தப்பண்டியகட்டை எல்லாம் என்ன உபயோகம். நீ போய் பூஜையைச்செய், சற்றுப்பொறுத்து சாப்பிடுகிறேன்.

சுப்பய்யர்.—“பத்து நாளாய் சரியாய் அன்னம் செல்லவில்லையாமே. ஏன் அப்படி, வைத்தியனை இட்டுவரட்டுமோ.”

பாட்டி.—சாகப்போகிற கம்மனுட்டிக் கட்டைக்கு வைத்தியம் என்னத்திற்கு.

சுப்பய்யர்.—லோகத்தில் சாகாத ஜீவசந்து ஒன்றுமில்லை. ஆகிலும், அவதிப்பட்டுச்சாவானேன்.

பாட்டி.—வைத்தியன் என்னத்தைக் கொடுப்பனே, அவன் கையினுல் கண்டதை எல்லாம் வாங்கிக் குடித்து, அப்படியாவது பிராணனைக்காப்பாற்றுவானேன். நீங்களெல்லாம் உயிரோடே இருக்கும்பொழுதே, உன்கையினுல் இவ்வளவு நெருப்பைவாங்கிக்கொண்டு போனேனேயாகில்போதும். தங்கத்தை நல்லவிடத்தில் கன்னிகாதானமாய்கொடுத்துக் காணவேணுமென்று ஆசைபோராட்டிக்கொண்டிருந்தது. நான்பாபி, அவ்வளவுக்கு ஜன்மாந்திரத்தில் புண்ணியம் செய்யவில்லை. என்பாபந்தான் குழந்தைகளையும் சுற்றுகிறதோ என்னவோ; நான்போய்விட்டால், ஒருவேளை அதற்கு கல்லியாணம் கார்த்தியாகி சுகமாயிருக்கும். எனக்கு மருந்து மந்திரம் ஒன்றும்வேண்டாம். சற்றுநேரத்திற்கெல்லாம் எல்லாந்தெளிந்துபோய்விடும். நாழிகையாயிற்று. நீபோய் பூஜையைச்செய்து சாப்பிடு.

சுப்பய்யர்.—தரையில் படுத்துக்கொண்டிருக்கிறாயே பாய், கம்பிளி, ஏதாவதொன்று எடுத்துப்போடட்டுமா.

பாட்டி,—“சாமி, பட்டப்பகலில் பாயும் தலையணையும் வேண்டாம். எனக்காக நீயாதொன்றும் அவதிப்படாதே, பட்டினிகிடக்காதே. தங்கம் பூஜைக்கு எல்லாம் சித்தமாய் வைத்திருக்கிறாள். பூஜையைச்செய்துவிட்டு சாப்பிடு.

சுப்பய்யர்.—“உன்னை பட்டினி போட்டுவிட்டு, நான் சாப்பிடவாவது.”

பாட்டி.—“என்னுடம்பு எனக்குத்தெரியும், அப்படி ஏதாகிலும் விபரீதமாயிருக்கும்பட்சத்தில், சொல்லுகிறேன். நீ போ.

என்னசொல்லியும் இவள் கேட்கமாட்டாள்போல் இருக்கிறது. பிடிவாதம் செய்வதினுல் பிரயோஜனமில்லை. பூஜைசெய்வதற்கு முன்னுல் சாப்பிடமாட்டாள். சுருக்க அதை முடித்துவரலாம். இருக்க இருக்க வீண் தாம்தந்தானே—என்று சுப்பய்யர் தங்கம்மாளைக் கிட்ட இருக்கச்சொல்லி தான் சுவாமி பூஜைக்கு புஷ்பத்தை எடுத்துக்கொண்டு ஏகினுர். பிறகு தான்போஜ

னம்செய்து, அம்மாவுக்கும் போஜனஞ் செய்வித்து விட்டு, வாசல் திண்ணையில், தட்டில் வைத்திருந்த தாம்பூலத்தைக்கூட போட்டுக்கொள்ளாமல், பெரும் விசாரத்தில் மூழ்கியிருந்தார். 'ஆனிமாதம் முடிய இன்னும் நாலுநாள்தான் இருக்கிறது. அதற்குள் இனிவரன் நேர்வதாய் ஹேஷியம் ஒன்றுங்காணும். பெண்ணுக்கோ வயதாய்விட்டது. அம்மாள் இரண்டு மாதத்திற்குமேல் தாங்கமாட்டாள். அவளுடைய "கைங்கரியம்" நேரும்பட்சத்தில் வருகிறவருஷம் கன்னிகாதானம் செய்யத்தடங்கல்படும். பெண்ணுக்கு சூத்திரஜன்மம் வந்துவிட்டால் விபரீதத்தில் முடியுமே. இந்த மாதத்திலேயே அம்மாள் ஜீவித்திருக்கும்பொழுதே விவாகத்தை நடத்துவது உத்தமம். கையில் பணமிருந்தால் எப்படியாகிலும் அடித்தப்பிடித்து தாலியைக்கட்டிப்போடலாம். அதுவுமில்லை. குடியிருக்கிறவீடு ஒன்றுதான் மிகுந்திருக்கிறது; மற்றையசொத்துக்கள் யாவற்றையும் கடன்காரர்கள் கொண்டுபோய்விட்டார்கள். இந்தவருஷம் சாப்பாட்டுக்குக்கூட நெல்லுப்போதாது. இந்த விசாரமே அம்மாளுடைய பிராணனை ஒடுக்கிவிட்டது. நான் எப்படி குழந்தைகளையும், தாயாரையும்வைத்து மரியாதையாய் ரக்ஷிக்கப்போகிறேன், பிள்ளைகளும் லௌகீக யோக்கியதை ஒன்றுமில்லாமல் வளர்கிறார்கள். பட்டணமாயிருந்தால், யாரிடத்திலாவது கெஞ்சிக்கேட்டு, கடையிலாவதுவைத்து நாலுரூபாய் சம்பாதிக்க வழிபார்க்கலாம். பெண்ணுக்கே கலியாணத்துக்கு இவ்வளவு திண்டாட்டப்பட்டால், இவர்களுக்கு கலியாணம் எப்படி ஆகப்போகிறது. சந்ததி நம்மோடு அற்றுப்போமே. நமக்குப்பின்னால் பிதிர்க்களுக்கு எள்ளுந்தண்ணியும் இறைக்க மார்க்கமில்லாமல் போய்விடுமே. கலியாணமில்லாமல் இவர்கள் பாலியத்தை யோக்கியர்களாய், பிதிர்க்கள் சாபத்துக்கு உள்ளாகாமல் துஷ்டர்களென்று பேரெடுத்தப் பெரியோர்களுடைய கீர்த்தியை கெடுக்காமல் இருக்கவேணுமே. இருக்கிற ஸ்திதியைப்பற்றி யோஜிக்க யோஜிக்க பயங்கரமாய் இருக்கிறதே. என்னுடைய ஆதிகாலமெல்லாம், வேலையின்றி செல்வமாய்க்கழித்து, இப்போ வயதுகாலத்தில், மகாதுன்பங்களையும், தரித்திரத்தையும் அனுபவிக்கவேண்டியிருக்கிறதே. அம்மா இறந்துவிட்டால், பிச்சைமுட்டி எடுத்து கொண்டுவந்த பதார்த்தங்களை சமைத்துத்போட மனுஷியாள் இல்லையே. சன்னியாசம் வாங்கிக்கொள்வோமென்றால் குழந்தைகளுக்கு காலட்சேபத்துக்கு வழிஏற்படுத்தாமல், அவர்களை சந்தியில் விட்டுவிட்டு ஓடி உலகத்தைத் துறத்தல், அசக்தியைக் காண்பிக்குமே ஒழிய விரக்தியைக் காண்பிக்காது. விரக்தியில்லாத சன்னியாசம் சுவாமிக்கு ஒப்பாகமாட்டாது. உலகத்தாரும் ஒப்பமாட்டார்கள். பூர்வஜன்மத்தில், யாருடைய சுகத்தைக்கெடுத்தேனோ, எவன் விர்த்திக்கு வருவதைத் தடுத்தேனோ, திரவியத்தை வைத்துக்கொண்டு ஏழைகளுக்கு அன்னம்போடாமற் குவித்தேனோ இப்போ இந்த அவகதி நேரிட்டிருக்கிறது. காரணம் யாதோ தெரியவில்லை, ஈசுவரா, ராமா, சர்வலோக சம்ரக்ஷகா,"—என்று மனவருத்தப்பட்டு, "என்ன பாபம்செய்கிறேன். அவரன்றி ஓரணுவும் அசைகிறதில்லையே. நடப்பதெல்லாம் நானாய்ச்செய்துகொள்ளுகிற காரியமல்லவே. எல்லாம் அவருடைய சங்கல்ப, விகல்பப்படி நடக்கிறது. அப்படியிருக்க லோகமெல்லாம், நானே தாங்குகிறவன்போல், கர்வங்கொண்டு, கவலைப்படுகிறது அஞ்ஞான மல்லவா. ஏன் வீணாய் துக்கிக்கிறேன்" என்று, மறுபடியும் மனதைத்தேற்றிக்கொண்டு, "லீலாவிபூதியாய், அகடவிகட நாடகசூத்திரதாரியாய் நின்று, பரப்பிரம்மமானது, அண்டசராசரங்களையெல்லாம் வியாபித்து நடத்தும் விநோதங்களைப்பற்றி தியானித்துக்கொண்டே இருந்தார்.

இச்சமயத்தில், பட்டுக்கரை வஸ்திரம் உடுத்தி, விபூதி சந்தனம் தரித்து, பிரசன்னமுகத்துடன் மங்கள வசனங்களைச் சொல்லிக்கொண்டு, இரண்டு வைதீகப் பிராமணர்கள் திடீரென்றுவந்து தோன்றி, "அய்யரவாள் நமஸ்காரம்" என்று, ஒருவரை ஒருவர் பார்த்து நகைத்து, "வழியில் நல்ல சகுனங்களெல்லாமாகியதற்குத் தகுந்தாற்போல, அய்யரவாளையும் சாவகாசமாயிருக்கிறபொழுது பார்க்கிறோம்." என்றொருவர். அதற்கு மற்றொருவர்: "சகுனமாத்திரம் தவறுகிறதேயில்லை. என்னுடைய அனுபவத்தில் நானும் பலதடவை பார்த்திருக்கிறேன். நான் எவ்வளவோ கலியாணங்கள் நடத்திவைத்திருக்கிறேன். சகுனத்தடையாயிற்றோ அதில் ஏற்படுகிறதேஇல்லை. இந்த சுபலக்நத்தில் சுப்பய்யரவாளை நாம் கண்டதே முதல்தரமான சகுனம். மகா குலோத்தமாள். தகப்பனார்நாளிலே, மகாதர்மிஷ்டர், அன்னதாதா என்றால், அவருக்குத்தான்தகும். எவ்வளவோ யாகயஞ்ஞங்களுக்கு திரவியம் சகாயஞ்செய்து நடத்திவைத்திருக்கிறார். தேகி என்று வந்தவனுக்கு, சத்துருவாயிருந்தாலும், நாஸ்தி என்று சொன்னவரல்ல. வாக்குசுத்தத்தில், அரிச்சந்திரன்தான் என்றுசொல்லவேணும். இதுவரையில் அய்யரவாளையும் நேரில் தரிசனம் செய்ததில்லை. நேரே பரிச்சயம் கிடையாது. ஆனால், இவாளுடைய சாப்தீகத்தையும், நித்திய நைமித்திய கர்மானுஷ்டான விருதங்களையும் பற்றி, திருப்தியாய்க் காதினால் ச்ரவணம் செய்திரு

க்கிறேன். நேரே முகஸ்துத்தியம் செய்யலாகாது, ......" என்று மூச்சுவிடாமல் பேசுபவரைகூட இருந்தவர் தடுத்து, "நல்ல லக்னத்திலேயே, வந்தகாரியத்தை பிரஸ்தாபிப்போம், அவாளுடைய குடும்ப சரித்திரங்களை எடுத்துச்சொல்ல எட்டுநாள் வேண்டும்" என்றார்.

சுப்பய்யர்.—"நீங்கள் யார், எந்த ஊர்; எங்கேவந்தீர்கள், போஜனஞ் செய்தீர்களா.

அய்யா சாஸ்திரி.—பொஜனமாய்விட்டது. ஆத்தில் குழந்தை இருக்கிறாளே அவளுக்கு ஒரு வரனிருக்கிறது. ஒருவிஷயத்தில்தவிர, மற்றதெல்லாவற்றிலும் மகா சிலாக்கியமாயிருக்கிறது.

சு. அ.—"வரனுடைய குலகோத்திரமென்ன."

அ. சா.—"சுயம் வடமாள், பத்தரைமாற்றுத்தங்கம்."

சு. அ.—"யோக்கியதை என்ன."

அ. சா.—"பத்துவேலி சர்வமானியம், வேலி நாலாயிரம் ரூபாய் குருடன் கொடுப்பன். நவதானியமும் விளையும்."

சு. அ.—"வரனிடத்தில் குறைவு என்ன."

அ. சா.—"துவிதியம்:" கன்னிகாதானம் பிரமசாரிக்கு செய்யவேணுமென்று தாங்கள் உத்தேசித்திருப்பதாகக்கேள்விப்பட்டோம். "துவிதீயமாய்" கொடுப்பதில்லை என்றால், நாங்கள் இப்போதே புறப்பட்டுப்போகிறோம். வேறே கன்னிகைகளைக்கொடுக்க சித்தமாயிருக்கிறார்கள். நிச்சயம்செய்துபோடுகிறோம். இந்தவருஷம் தாங்கள் பெண்ணுக்கு எப்படியாவது கலியாணஞ் செய்துபோட நிச்சயித்திருப்பதாகவும், வேறே தகுந்த வரன் அகப்படாதபட்சத்தில், துவிதீயமாய்க் கொடுக்கக்கூட இஷ்டப்படலாமென்றும், கேள்விப்பட்டேன்.

சு. அ.—சுப்பய்யர் முகத்தில் வெட்கமும், வருத்தமும் தோன்ற, சற்றுயோஜித்து; நமக்குக் கன்னிகாதான பலன் கிடைக்காவிட்டாலும், குழந்தைக்கு பசியில்லாமற் சாப்பிட ஏது உண்டாகுமே பார்ப்போம்" என்று நினைத்து, பிடிகொடுத்துப்பேசாமல், 'வரனுக்கு வயதென்னவிருக்கும்?' என்றார்.

அ. சா.—ஜாதகமிருக்கு, பார்த்து எண்ணிச்சொல்லுகிறேன்.

சு. அ.—மூத்தாளுக்கு குழந்தைகள் உண்டோ.

அ. சா.—ஒரேபிள்ளை, பதினெட்டு வயதாயிற்று பட்டணத்தில், நூறு ரூபாய் சம்பளம் உத்தியோகம் செய்கிறான். பையன் பிதாவை தலைமேல் தூக்கிவைத்துக்கொண்டிருப்பான். அவனும், அப்பாவுக்கு கலியாணஞ்செய்துவைத்து அப்புறம் வேறே வேலைபார்க்கவேணுமென்று எங்களுக்கு உத்திரவு கொடுத்திருக்கிறான்.

சு. அ.—பையனுக்கு கலியாணமாயிற்றோ.

அ. சா.—கலியாணமாகி நாட்டுப்பெண் ஆத்துக்கு வந்துவிட்டாள். மாமனாரிடத்தில் சொந்தபிதாவினிடத்தில்விட பத்துப்பங்கு அதிக அபிமானம். கொடுக்கும்பட்சத்தில், தங்களுடைய குழந்தைக்கு யாதொரு குறையுமில்லை. வரனுக்கு கொஞ்சம் வயதாயிற்றே என்கிற ஒரு குறைதான். மற்றப்படி தங்களுடைய குமாரர்களுக்கும் சௌகரியந்தான். ரொக்கத்தில் நாற்பதாயிரம் ரூபாயிருக்கிறது, பையனும் மேலே மேலே சம்பாதிக்கிறான். குமாரர்களைப் படிக்கவைத்து, கைதூக்கிவிட்டு கலியாணமுதலியவைகளைச் செய்வித்து, சளைத்தவேளையில், தங்கள் குடும்பத்தை நாலாவிதத்தாலும் தாங்கி முன்னுக்குக் கொண்டுவருவார்கள். தங்கள் பெரியவாள் நாளையில் இருந்த ஸ்திதிக்கு, முன் போலவே சீக்கிரத்தில் வந்துவிடும். கையை விட்டுப்போன நிலம் தோட்டம் எல்லாவற்றையும் மீட்டுக்கொள்ளலாம். வரனுடைய குணகுணங்களையும், சாதக பாதகங்களையும் யோஜித்து எங்களுக்கு உண்டு, இல்லை என்பதை முடிவாய் பதில்சொல்லவேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

சு. அ.—இராமாசாஸ்திரி ஊரிலில்லை. நாளைக்கு வருவார். நான் அவருக்கு இப்பொழுதே மனுஷியனனுப்பிவித்து வரவழைத்து, கலந்துபேசி, நாளைக்கு சாயங்காலம், நிச்சயஞ் சொல்லுகிறேன்.

அ. சா.—இன்னம் மூன்று நாள்தான் இருக்கிறது ஆனிமாதம் முடிய ; அதற்குள் கலியாணம் ஆகவேணும். அவ்வளவு தாமதப்பட அவகாசமில்லை. வெறே இடங்களில் பெண் வீட்டுக்காரர்களும் அவசரப்படுகிறார்கள். துவிதியமென்பதைத்தவிர மற்றைய விஷயங்களைப்பற்றி யோஜிக்கவேண்டிய தொன்றுமில்லையே. அதற்கும் இராமாசாஸ்திரியாரைக் கேட்டால் பிரயோஜனமென்ன. தாங்களே யோஜித்துச்சொல்லிப்போடலாமே.

சு. அ.—சற்றிருங்கள். உள்ளேபோய் அம்மாவைக் கேட்டு உத்தரம் அளிக்கிறேன்.

(இன்னும்வரும்.)

## சித்தாச்சிரமம்.

[அடியில்வரும் விருத்தாந்தமானது இரண்டு சந்நியாசிகளால் வெளியிடப்பட்டது. அவர்களில் ஒருவர் பாபு ப்ரமோதநாத முகர்ஜீ, எம்.ஏ. இவர் இப்பட்டம் பெற்றது ஆக்ஸ்போர்டு யூனிவெர்ஸிடியில். இவர் அநேக வருஷங்களாக இவ்வுலக வாழ்க்கையைத் துறந்து மதக் கோட்பாடுகளைத் தழுவினவராய் சந்நியாசத்தைக் கைக்கொள்ள ஆவலாயிருந்தார். ஹிமோத் பருவதத்தின் கொடுமுடிகளாகிய கிஞ்சின்ஜிங்கா, தவளகிரி என்னுமிரண்டிற்குமிடையில் இருக்கிற சித்தாச்சிரமத்தை இந்த ப்ரமோதநாதர் மற்றொருவருடனே போய்ப்பார்த்தார்.]

ஹிமோத்பருவதத்தின் அடிவாரத்தில் ஸிக்கிம், பூடான் என்ற நாடுகளின் தென்பக்கத்தில் நாமர் பஜார் என்றபெரிய சந்தையொன்றிருக்கிறது. சுற்றுப்பக்கத்திலுள்ள மலைப்ரதேசங்களில் வசிக்கும் ஜனங்கள் அந்தச்சந்தைக்குவந்து சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான்கள் வாங்கிக்கொண்டுபோவது வழக்கம். பிரதிவருஷமும் கார்த்திகை பங்குனிமாசங்களில் ஹிமோத்பருவதத்திலிருந்து யோகிகள் கூட்டமாய் இந்தச்சந்தைக்கு வருவார்கள். இச்சந்நியாசிகள் ஐம்பது அறுபதுபேராகவந்து அரிசி நெய்முதலியசாமான்களைவாங்கிக் கொண்டுபோவார்கள். இந்த சாமான்களை தங்களுக்கு உபயோகப்படுத்திக் கொள்வதுமல்லாமல் தற்செயலாய்ச் சித்தாச்சிரமத்தில் வந்துதங்கும் அதிதிகளுக்கும்கொடுத்து உபசரிப்பார்கள். மேழேவந்த சந்நியாசிகள் இரண்டொருநாளில் தங்கள் காரியத்தை முடித்துக்கொண்டு மலையேறித்தங்கள் இருப்பிடத்திற்கு அதிவேகமாய்ச் செல்வார்கள். தங்களுடன் யாராவது அந்நியர்கள் வந்துவிடுவார்களென்றெண்ணி, ஒருவரும் தங்களைப்பின்தொடர்ந்து நடக்க முடியாத அவ்வளவு விரைவாய்ச்செல்வார்கள்.

முற்கூறிய இரண்டு சந்நியாசிகள் மற்றவர்களுடன் தக்க காலத்தில் நாமர் பஜாருக்குப்போய் சித்தாச்சிரம யோகிகளின் வரவை வெகு ஆவலாய் எதிர்பார்த்திருந்தார்கள். இப்படியிருக்கையில் ஒருநாள் இவர்கள் எதிர்பார்த்திருந்த பிரகாரமே சித்தாச்சிரம யோகிகள் 50, 60-பேர்கள் ஒரு கூட்டமாய் நாமர் பஜாருக்கு வந்து தங்களுக்குவேண்டிய சாமான்களை வாங்கிக்கொண்டு தங்கள் ஆச்சிரமத்தை நோக்கி வெகு விரைவாய்ச்செல்ல ஆரம்பித்தார்கள். பாபு ப்ரமோத நாதரும் அவருடன் போயிருந்த சிலரும் அவர்களை வெகு ஜாக்கிரதையாய்ப் பின்தொடர்ந்தார்கள். ஆனால் பிரயோஜனமில்லாமற் போயிற்று. யோகிகள் வெகு விரைவாய் நடந்ததனால் 10-மயில் தூரம் போகிறதற்குள்ளாக அநேகர் ஒவ்வொருவராக பின்னால் நடக்கமுடியாமல் நின்று விடவேண்டியதாய்நேரிட்டது. ஆனால் நாம் முன்சொன்ன இருவர்மட்டுமே அவர்கள் பிரயாணமுடிவுமட்டும் சென்றார்கள்.

நாமர் பஜாருக்கும் சித்தாச்சிரமத்திற்கும் மலைப்பாதையாயுள்ள தூரமானது ஐந்துநாள் பிரயாணமுள்ளது. அடிவாரத்திலிருந்து 37-மயில்தூரம்வரைக்கும் மனிதர் வசிக்கும் வீடுகளை இங்குமங்கும்கூடக் காண்பது அரிது. மேலே போகப்போக, மேகமண்டலத்திற்கும் மேலே என்றும் கரையாத பனிக்குவியல்கள் படிந்திருக்கின்றன. இவையெல்லாம் ஹிமோத் பருவதத்தின் ஏகாந்தத்திற்கு ஒரு சம்பீரத்தையும் அழகையும் கொடுக்கின்றன. கற்பிளப்புகளினின்றும் அநேக ஓடைகள் கிளம்பி சப்தம்செய்து கொண்டு அதிவேகத்துடன் இங்குமங்கும் மலையருவிகளாக ஓடுகின்றன. வருஷத்தில் ஒருதடவை கூட சூரியரச்மியே படாத அநேக இடங்களின் வழியாய் யோகிகள் சென்றார்கள். ஆயினும் அடிக்கடி மாலைவெளிச்சம் அந்த பயங்கரமான தோற்றத்தை மாற்றும். அம்மலைப்ரதேசத்திலுள்ள துஷ்டசெந்து வெள்ளைக்கரடி ஒன்றுதான். அதிக குளிர்ச்சியான இடங்களில் போகும்பொழுது ஒவ்வொரு சந்நியாசியும் பனியை விலக்கிக்கொண்டு போகும்படியாக்த் தங்கள் கையில் ஒரு தீப்பந்தம் வைத்துக்கொள்வார்கள். இராத்திரிகாலங்களில் மரத்தடியிற்றங்கி உலர்ந்த சருகுகளையும் கட்டைகளையும் எரித்து தீக்காய்வார்கள். மலைகளிலுள்ள பழவர்க்கங்களைத் தின்று அங்கிருக்கும் ஊற்றிலுள்ள மதுரமான ஜலத்தைக் குடித்து பசிதாகாதிகளைத் தீர்த்துக்கொள்வார்கள். அதிக ஆழமில்லாத நதிகளைக் காலால் நடந்து கடப்பார்கள், அதிக ஆழமானால், மரப்படவுகளால் கடந்து செல்வார்கள். அவர்கள் செல்லுங்காலத்தில் கணக்கிலடங்காத சிறு நதிகளைக் கடந்ததுமன்றி, பெரிய நதிகள் இரண்டையும் கடந்தார்கள். ஹியாகோ (Hiyako) என்னும் இடத்தில் அந்தச் சந்நியாசிகள் ஒரு வரிசையாய்ச் செல்லவேண்டியிருந்தது. மேகங்கள் எட்டும்படியிருந்ததால், அவர்கள் எல்லாரும் நனைந்துபோனார்கள். கடைசியாக, பரிசுத்தமான கங்காநதியின் உத்பத்தி ஸ்தானங்களில் ஒன்றைப்போய்ச்சேர்ந்தார்கள். அதின் எதிர்க்கரையில் தான் ஸித்தாச்சிரமமிருக்கிறது. இந்த இடத்தில் கங்கைக்கு மந்தாகினியென்று பெயர். இந்த மந்தாகினியைத்தாண்டி தங்களது இருப்பிடமாகிய ஸித்தாச்சிரமத்திற்குவந்துசேர்ந்தார்கள். இந்த ஆச்சிரமம் மேகமண்டலத்திற்கும்மேலே அதிகமாய் உயர்ந்திருக்கின்றது. ஸித்தாச்சிரமத்திற்கும் நாமர் பஜாருக்

கும் மலைச்சாய்விற்பார்த்தால் 14 - மயில்தூரமிருக்கிறது.

இந்த யோகிகளைப் பின்தொடந்துபோன இரண்டு சந்நியாசிகளில் ஒருவர் ப்ரமோத நாதர், எம். ஏ. சித்தாச்சிரமத்திற்குள்ளே எல்லாரும் போகக்கூடாது. அதற்கு வெளியே, வந்தபிரயாணிகள் தங்குவதற்கு ஒரு இடமிருக்கிறது. பிரமோத நாதர் ஆச்சிரமத்திற்குள்வர அச்சந்நியாசிகள் சம்மதிக்காமல், அவரை வெளியிலேயே இருக்கச்சொல்லி உள்ளேபோய் தங்கள் குருவின் உத்தரவைக் கேட்டுக்கொண்டு வருவதாகச் சென்றார்கள்.

ஸித்தாச்சிரமத்திற்குள் வீடு முதலியன ஒன்றுமில்லை. அதுமேகமண்டலத்தையும் கடந்து அதிக உயரமாக இருக்கிறதினால் அங்கு மழைபெய்யுமென்கிற பயமில்லை. வெயிலின் உக்கிரத்தை ஹிமோத்கிரியின் குளிர்ந்த காற்றானது சாந்தப்படுத்துகிறது. இக்காரணங்கள்பற்றி அவ்விடத்தில் வீடுமுதலியகட்டவேண்டிய ஆவசிகம் ஏற்படவில்லை. சில யோகிகள் மரத்தின் நிழலிலும், சிலர் குகைகளிலும், மற்றவர்கள், இரவும் பகலும் சுவாலையாயிருக்கிற எட்டு ஹோமகுண்டங்களில் ஏதாவது ஒன்றின்பக்கத்திலும் வசிக்கிறார்கள்.

சித்தாச்சிரமத்தில் ஒரு புத்தகசாலையிருக்கிறது. இயற்கையாய் ஏற்பட்டுள்ள இரண்டு கற்சுவர்களின் மீது கிஞ்சின்ஜிங்கா (Kinchinjinga) என்னும் கொடுமுடியினின்றும் சாய்வாகவந்து ஒரு கற்பாறை தங்கியிருக்கிறது. அது ஒரு அறைபோன்று இருக்கிறது. இவ்வறைக்குள் தேவநாகிரி அட்சரத்தில் எழுதிய தொன்மையான ஸம்ஸ்கிருத கிரந்தங்களின் கையெழுத்துப் பிரதிகள் இருக்கின்றன.

அநேக மலைவிருக்ஷங்களோடும் மூலிகைகளோடும் கூட, நாம் புஸ்தகமூலமாய்க்கேட்டிருக்கிற 'ஸோம விருக்ஷம்' காடாயிருக்கிறது. அதின் இலைகள் வெற்றிலையைப் போலிருக்கிறது. இந்த உத்கிருஷ்டமான செடியின் ரசமானது சாப்பிட்டால் லாகிரி வஸ்துக்களைப்போல மயக்கத்தை உண்டுபண்ணுகிறதில்லை. ஆனால் சாப்பிடுவோர்க்கு ஒருவிதமான பக்தியை உண்டுபண்ணி சொல்லமுடியாத ஆநந்தத்தையு முண்டுபண்ணுகிறது. யோகிகள் ஹரிதாகி, அம்லாகி என்னும் பழங்களைச்சாப்பிடுகிறார்கள். அவர்களிற் சிலர் நெய்சாப்பிடுகிறார்கள், அவர்களது பானமோ தெளிந்த குளிர்ந்த மலைஅருவிச்சலம் தான்.

சித்தாச்சிரமத்து யோகிகள் அதிகாலையில் எழுந்திருந்து மந்தாகினியில் ஸ்நானஞ்செய்துவிட்டுப் பிறகு சாஸ்திரவிதிப்படி யக்யாதிகிருத்யங்களைச் செய்து வேதங்களையும் உபநிஷத்துக்களையும் எல்லாரும் சேர்ந்து உரக்கப்பாராயணம் பண்ணுகிறார்கள். சிலர் கிழங்கு முதலியவைகளையும் மற்றும் சிலர் தண்ணீரையுமட்டுமே சாப்பிடுகிறார்கள். இன்னும் சிலரோ நிராகாரமாயிருக்கிறார்கள். சித்தாச்சிரமத்திற்போய்த்தங்குகிற அதிதிகள் நன்றாய் உபசரிக்கப்படுகிறார்கள். அந்த ஆச்சிரமத்தில் மொத்தத்தில் தொண்ணூற்றேழு யோகிகளிருக்கிறார்கள். அவர்களில் அநேக அந்தஸ்துண்டு.

புதிதாய் வந்தவர்களுள் ஒருவராகிய பாபு ப்ரமோத நாதரை ஆச்சிரமத்திற்குள்ளே அழைத்துப் போகாமல் வெளியிலுள்ள இருப்பிடத்திலிருத்தி, அவர் காலமெல்லாம் மிலேச்சனைப்போல ஜீவித்ததனால், பரிசுத்தமாகும்பொருட்டு **பஞ்சாக்கினி ப்ராயச்சித்தம்** செய்துகொள்ள வேண்டுமென்று சொல்லினார்கள். அதற்கு ப்ரமோதநாதரும் சம்மதித்தார். அவரை ஒருக்ருஷ்ணாஜினத் (மான்தோல்) தின்மேல் உட்காரச்செய்து, அவருக்கு முன்னால் சுமார் இரண்டரை அடிதூரத்தில் நான்குபெரிய ஹோமகுண்டங்களில் அக்னிச் சுவாலைசெய்தார்கள். சூரியனது உக்ரமான கிரணங்கள் அவர்மேல் காய்ந்தன. இந்த ஸ்திதியில் 61-நாள்வரைக்கும் இருந்து பின்பு தீக்ஷைபெற்றார்.

சித்தாச்சிரமயோகிகளில் முதன்மைபெற்ற இருவர் இவரை ஆச்சிரமத்திற்குக்கொஞ்ச தூரத்திலுள்ள ஒரு இடத்திற்கு இட்டுக்கொண்டுபோனார்கள். அங்கே **பத்மாசனம்** இட்டு சமாதியிலிருந்த இரண்டு யோகீஸ்வரர்களைக்கண்டார். அவர்கள் அதிக உயரமானவர்களானகையால் பத்மாசனமிட்டு உட்கார்ந்திருந்தும் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தவர்களைக் காட்டிலும் உயர்ந்திருந்தார்கள். "இந்த இரண்டு மஹாத்மாக்களும் இந்த ஆச்சிரமத்திற்கு குருஸ்தானம்" என்று முதன்மைபெற்ற இரண்டுயோகிகள் ப்ரமோதநாதருக்குச்சொல்லினர். அவர்கள் ஸமாதியிலிருந்து கண்விழித்துப் பார்க்கிறதேயில்லை. ஆயினும் அந்த ஆச்சிரம ப்ரதேசத்துக்காரியங்கள் சரியாய் நடந்து வரும்பொருட்டு ஒவ்வொருவரும் இன்ன இன்ன செய்யவேண்டுமென்று மானஸீகமாய்க் கட்டளையிடுகிறார்கள். மற்றவர்களும் அதை மானஸீகமாகவே தெரிந்து செய்கிறார்கள். குருஸ்தானத்திலிருப்பவர்களாகிய இருவரும் வெகுகாலமாக இந்த நிலைமையிலிருக்கிறார்கள். ப்ரமோத நாதரை உள்ளே அழைத்துக்கொண்டுபோன இரண்டு யோகிகளும் **குருபேஷ்டியுந்தத்**தைப்பார்த்தவர்கள்.

ஹிமோத்கிரியின் மேலேபோகப்போக மனிதர் செல்லமுடியாத அநேக வேறு ஆச்சிரமங்களுமிருக்கிற தாகவும் அவ்விடங்களில் வியாசமுனிவரைப்போலொத்த ரிஷீசுவராள் இன்னும் வசிக்கிறதாகவும் சொன்னார்கள்.

ப்ரமோதநாதரும் அவர் ஸஹாவும் ரிஷிகளுடன் 5-வருஷகாலமிருந்து விட்டுப்பிறகு கீழேவந்திருக்கிறார்கள். அந்த ஆச்சிரமத்திற்கு மறுபடியும் போகப்போகிறார்கள்.

**பி. எஸ். சுப்பிரமணிய அய்யர், பீ. ஏ.**

[இந்த விர்த்தாந்தம் வங்காளத்துப் பத்திரிகைகளெல்லாவற்றிலும் வெளியானதன்றி மிஸ்டர் வி. முகோபாத்தியா, எம். ஏ. அவர்கள் பதிப்பித்துவரும் "Light of the East" என்னும், ஹிந்து மத வேதவேதாந்த சித்தாந்த விஷயமான மாதாந்தப் பத்திரிகையிலும் வெளியாயிற்று. இச்சங்கதிகளைப் புலர் நம்பாமல் பல ஆக்ஷேபனைகள் சொன்னதாகவும், தீர ஆராய்ந்து பார்த்தபின் அவையெல்லாம் காலற்ற ஆக்ஷேபனைகளாக விருக்கின்றனவென்றும், இந்த விர்த்தாந்தத்தை மிஸ்டர் வி. முகோபாத்தியா, எம். ஏ. அவர்கள் உண்மையாகவே நம்புவதாயும், ஆத்மஞானவழியில் விசாரஞ்செய்துகொண்டுபோனால் இன்னும் அதிசயமானவைகள் எத்தனையோ விருக்கின்றனவென்றும், இதைப்போல் சித்தாச்சிரமங்கள் ஹிமோத் பர்வத உச்சியிலும் மலைச்சாரலிலும் எத்தனையோ இருக்கின்றனவென்றும் நம் கைக்குவந்த சென்ற அக்டோபர் மாசத்துச் சஞ்சிகையில் அவர் வற்புறுத்திக் கூறுகிறார்.—வி. சி. ப.]

---

## *தாலாட்டு.

[மாக்ஷிமை தங்கிய மஹாராணியாரின் பௌத்திரரும், வேல்ஸ் இளவரசரின் புத்திரருமாகிய 'டியூக் ஆப் யார்க்' அவர்களுக்கு உற்பவித்த அரசிளஞ் செல்வத்துக்குப் பாடிய தாலாட்டு.]

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ
ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ.

1. சீரார் பசுங்கிளியோ தித்திக்கும் செங்கரும்போ
பேரார்குலவிளக்கோ பெம்மானே ஆராரோ.

2. திருவுடையார் பன்னாளும் செய்தவத்தால் ஓங்கும்
ஒருகுடைக்கீ ழிந்த உலகாள வந்தவனே.

3. புத்தமுதோ சர்க்கரையோ [1]பொங்குகதி ரோனென்றும்
அத்தமியா ஞாலமெலா மாளவந்த ஆண்டகையோ.

4. கண்ணிணைபோல் ஞாலமெலாம் காக்க அவைபுரிந்த
புண்ணியத்தா லுற்பவித்த பூலோக விந்திரனே.

5. இந்திரனே சந்திரனே எவ்வுலகும் போற்றவரு
சுந்தரனே காலைச் சுடரோ னவிரொளியோ.

6. அங்கிலயர் கோவோ, அமெரிக்கர் காவலனே
பங்கமுறு திந்தியரைப் பாலிக்கும் பார்த்திபனே.

7. [2]அங்கிலமா நங்கை யணிமுடிக்கு நாயகமாம்
துங்கமணி தன்னைத் துலங்குவிக்கும் பேரொளியோ.

8. அத்திரலி யார்பதியோ ஆப்பிரிக்க ராண்டகையோ
எத்திசையும் வாழ்வோர்க ளேத்தவந்த மாமணியோ.

9. சீராரு மன்னர் திறையளந்து தெண்டனிட்ப்
பாராள் பெரும்புகழ்சேர் பாட்டியர்தம் பாக்கியமோ.

---

* A Lullabhy to the Infant Prince, Son of H. R. H. the Duke of York.

[1] The Empire on which the sun never sets.

[2] The brightest gem in the diadem of England, *i. e.*, India.

10. தாய்போல வெவ்வுலகுந் தண்ணளியாற் பாலிக்கும்
பாய புகழ்படைத்த பாட்டியர்தம் கண்மணியோ.

11. முரசாருங் கோயில் முடிமன்னர் தாழ
அரசாளும் பாட்டியருக் கன்பான நன்மருந்தோ.

12. எத்திறத்தா ரானுலும் ஏற்றக் குறைவின்றி
வைத்தருளா லாளுமொரு மாதரசி வான்றவமோ.

13. சத்துருக்கள் தாழத் தமர்கள் தலையெடுப்ப
விக்டொரியா வம்சம் விளங்கவந்த செஞ்சுடரோ.

14. கற்றவர்கள் நெஞ்சம் களிக்கப் புரந்தருளும்
நற்றவங்கள் மிக்கமஹா ராணியவர் பேரனே.

15. [1]வெல்லிசத்தார் கோமான் விரும்பும் செழுங்கரும்போ
நல்லிசையார் கோமாட்டி நாடுமொரு நற்கனியோ.

16. தந்தையார் செய்த தவப்பயனே தாயார்செய்
நிந்தையிலாப் பேறும் நிகரில் பெருந்தவமோ.

17. ஆர்க்கும் குறையொன் றணுகாம லாதரிக்க
யார்க்கரசன் நற்றவத்தி லெய்தியவோர் நன்மணியோ.

18. மல்குஜய வாண்டு வளமான ஆனிமதி
சொல்லும் சதயநாள் தோன்றுமொரு தோன்றலோ.

19. பஞ்சமிநாள் தன்னில் பதினேராந் தேதியினில்
அஞ்சனிவா ரத்தில் அவதரித்த தெள்ளமுதோ.

20. ஆயிரத்தெண் ணூற்றுத்தொண் ணூற்றுநா லாமாண்டில்
மேயமதி ஜூனதனில் மேவும் குலக்கொழுந்தோ.

21. வாடாது நாடெல்லாம் வாழ்விக்கும் நன்மருந்தோ
தேடாரு மாமணியோ தித்திக்கும் தெள்ளமுதோ.

22. ஒளியார் முழுமதியோ ஒப்பரிய மாமணியோ
அளியார் மலர்த்தேனே ஆரமுதோ சர்க்கரையோ.

23. மண்களிக்க நல்லோர் மனங்களிக்க மாதிரத்தார்
கண்களிக்க வந்த கவினுரும் குஞ்சரமோ.

24. நன்மதிபோ லேவளர்ந்து ஞாலமெலா மின்பமுறப்
பொன்முடியைப் பல்லாண்டு பூணவந்த புண்ணியனே.

25. எத்தலமும் கோல்செலுத்தி யெவ்வுலகும் தன்குடைக்கீழ்
வைத்தரசு செய்து வளமருளும் வள்ளலோ.

26. செய்யவொளி யாருமொரு சிங்கக் கொடிநாட்டி
வையகங்க ளெல்லாம் வாழ்விக்கு மாமருந்தோ.

27. கோல்கோணு மன்னவரைக் கூடா தெனவிலக்கிக்
கால்போல வேகுடியைக் காக்கவந்த காவலனே.

28. எளியோர் வலியோரா லேதமுரு தென்றும்
அளியா லளிக்க வவதரித்த வாண்டகையோ.

[1] The Prince of Wales.

29. இல்லார்மே லுள்ளார் இறுமாப்பும் ஏற்றமும்
செல்லாது காக்கவந்த தேசார் தராபதியோ.

30. தீயார்க்குச் செந்தழலைச் சிந்தவந்த பேரிடியோ
தூயார்க்குத் தண்ணருளைத் தூன்பகலப் பெய்மழையோ.

31. நல்லறந்தா னேங்கி நாலுகால் நன்கூன்றிச்
செல்லுமா றிந்தச் செகம்புரக்க வந்தானோ.

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ.

எஸ். முத்து அய்யர், பி. ஏ.

---

## உபாத்தியாயர் பக்கம்.

### சிறுபிள்ளைகளுக்கு கற்பிக்கவேண்டிய முறை.

II.

(BY A LICENTIATE IN TEACHING.)

முதலில் கேள்விகள் இருக்கவேண்டிய மாதிரியைப்பற்றி யெழுதுவோம். இங்கே சொல்லப்போகிற இலக்ஷணங்கள் முக்கியமாய் **போதனு கேள்விகளுக்கு** இருக்கவேண்டியது.

1. கேள்விகள் சுலபமான பதங்களில் தெளிவாய்போடப்படவேண்டும். மறுமொழிசொல்ல ஆலோசிக்கவேண்டிய சிரமத்துடன் கேள்விகளுக்கு அர்த்தம் கண்டுபிடிக்கக்கூட சிரமப்படும்படி யிருக்கக்கூடாது. புதிதாய் உபாத்தியாயர் வேலையில் புகுகிற சிறுவர்கள் கேள்விகள் கேட்பதின் உத்தேசம் பிள்ளைகளின் அபிவிருத்தி யென்பதையறியாதவர்களாய் தங்கள் பாண்டியத்தைப் பிள்ளைகளிடத்தில் காட்டினால்தான் அவர்களுக்கு மலைப்பாயிருக்குமென்றெண்ணி கடினபதங்களைப் பிரயோகித்து தடபடலாய்ப் பேசுவது வழக்கம். அப்படிப்பேசுவதில் பிரயோஜனமில்லை. உபாத்தியாயர் என்னமோ சொல்லுகிறார் என்று பிள்ளைகள் கவனத்தப்பாயிருப்பார்கள். சுலபமானபதங்கள் அடங்கினவாயிருப்பதுடன் கேள்விகள் ஸ்பஷ்டமாயு மிருக்கவேண்டும். உபாத்தியாயர் இன்ன மறுமொழியைத்தான் எதிர்பார்க்கிறார் என்று எல்லாப்பிள்ளைகளுக்கும் நிச்சியமாய் தெரியக்கூடிய தாயிருக்கவேண்டும். உதாரணமாக "சென்னபட்டணத்தில் என்ன அகப்படும்" என்ற கேள்வியில் நிச்சயமாய் இன்னதைத்தான் உபாத்தியாயர் மறுமொழியாக உத்தேசிக்கிறார் என்று நிச்சயித்துச் சொல்ல இடமில்லை. இந்தக் கேள்வியிலுள்ள பதங்கள் சுலபமானவையாயினும் கேள்விமட்டும் தெளிவான கேள்வியல்ல. அந்தமாதிரி கேட்கக்கூடாது.

2. கேள்வியில் அடங்கிய விஷயம் பிள்ளைகளின் சக்திக்குத் தக்கபடியிருத்தல்வேண்டும். அதிக கடினமாயாவது அதிக சுலபமாயாவது இருக்கக்கூடாது. விஷயம் மிகவும் கடினமாயிருந்தால் பிள்ளைகள் குருட்டாட்டமாய்பதில்சொல்வார்கள்; அல்லது மறுமொழி யொன்றும் சொல்லாமலிருப்பார்கள். இந்த இரண்டிலொன்றுதான் ஏற்படக்கூடும். கண்டபடி மறுமொழிசொல்வது கெட்ட வாடிக்கை. தனக்கு நிச்சயமாய்த் தெரியாத ஒரு விஷயத்தை பலித்த மட்டில் லாபந்தானே யென்றுசொல்லப்புகுதல் தப்பு. இது பொய்சொல்வது போன்றது. அந்த அப்பியாசத்திற்கு இடங்கொடுக்கக்கூடாது. கேட்டகேள்விக்கு மறுமொழி சொல்லமாட்டாமலு மிருக்கலாமல்லவா. இப்படி யனேகங் கேள்விகளுக்கு மறுமொழி சொல்லமுடியாமல்போகவே "நமக்கு ஒன்றும் தெரிகிறதில்லை, நமக்குப் படிப்பு வருவது கிடையா"தென்று பிள்ளைகளுக்கு அதைரியம் வந்துவிடும். ஆகையால் அதிக கடினமான கேள்விகள் போடக்கூடாது. அதிக சுலபமான கேள்விகளைப்போட்டாலோ அதுவும் மோசந்தான். யோசிக்கவேண்டிய அவசரமில்லை யாதலால் பிள்ளைகள் சோம்பேரிக ளாய்விடுவார்கள். ஆதலால் பிள்ளைகளின் சக்திக்கேற்ற வண்ணம் கேள்விகளை யாலோசித்துப்போடவேண்டும். மேலும் ஒருவகுப்பில் படிக்கும் பிள்ளைகளில் சிலர் புத்தி கூர்மையுள்ளவர்களாயும் சிலர் மந்த புத்தியுள்ளவர்களாயு மிருப்பார்கள். ஆனால் உபாத்தியாயர் ஸமர்த்தராயிருந்தால் ஒவ்வொருபிள்ளையையும் தன்னால் வஞ்சனையின்றி சிரமப்படும்படிசெய்விப்பார். அப்படிப்பட்ட பிள்ளைகளுக்கு அவரவர்களுக்குத்தகுந்தபடி கேள்விபோடவேண்டியது. மந்த புத்தியுள்ள பிள்ளைகளுக்கு "நாம் என்ன உழைத்தும் பயன்படவில்லையே! உபாத்தியாயர் போடும் கேள்விகளில் ஒன்றிற்காவது நம்மால் உத்திரம் சொல்லக்கூடவில்லையே" யென்று தங்களை

நொந்து கொள்ளாமலிருக்கும்படி அவர்களுக்குத்தக்க கேள்விகளை யவர்களுக்குப்போட்டு அவர்களுக்கும் உத்ஸாசமுண்டு பண்ணவேண்டும். அதேரீதியாய் கெட்டிக்காரப் பிள்ளைகள் "நாம் எல்லா விஷயங்களிலும் கரைகண்டு விட்டோம், நமக்குத்தெரியாதது ஒன்றுமில்லை" யென்ற அகம்பாவம் கொள்ளாமல் "நமக்குத்தெரியாத விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன" வென்று அவர்களுக்குத் தோற்றும்படி சில கேள்விகளை யவர்களுக்குப்போடுவது நலம்.

3. கேள்விகள் ஒன்றிற்கொன்று ஸம்பத்தப்பட்டு சங்கிலித்தொடர் போலிருக்கவேண்டும். அதாவது முதலில் ஒரு கேள்விபோட்டு மறுமொழி பெற்றவுடன் போடும் இரண்டாம் கேள்வி யிந்த மறுமொழியை யொட்டினதாயிக்கவேண்டும். அதுபோலவே மற்றக்கேள்விகளும். அப்படி தொடர்ச்சியாயிருந்தால்தான் விஷயங்கள் மனதில் நன்றாய்ப் பதியும்.

4. கேள்விகளிலேயே மறுமொழிகள் அடங்கினவாயிருக்கக்கூடாது. "நாம் நம்முடைய தாய்தந்தையர்களுக்கு கீழ்ப்படிந்து நடக்கவேண்டிய தில்லையா" என்ற கேள்விபோடுவதில் பிரயோஜனமில்லை. கேள்வியினாலேயே மறுமொழி ஸ்பஷ்டமாய் விளங்குகிறது. கேள்விகள் போடுவதின் உத்தேசம் பிள்ளைகள் ஆலோசிக்கவேண்டுமென்பது. இந்தமாதிரி கேள்விகள் போடுவதில் அந்த உத்தேசம் நிறைவேற இடமில்லை.

மேற்சொல்லிய இலக்ஷணங்களை உபாத்தியாயர் கவனிப்பதுடன் எந்தமாதிரி அவைகளைப்பிள்ளைகளுக்குப்போடவேண்டு மென்பதையும் அறிந்திருக்கவேண்டும். சிலர் வகுப்பில் முதலாவது பிள்ளையிடம் ஆரம்பித்து வரிசையாய் ஒவ்வொரு பிள்ளையாய்க்கேட்டு ஒருமுறை யெல்லாரையும் கேட்டு முடிந்தவுடன் திரும்பவும் முன்போலவே முதல் பிள்ளையிடம் ஆரம்பிப்பதுண்டு. இது சரியல்ல. ஒரு வரிசைக்கிரமத்தில் கேள்விகள் வருகின்றனவென்று ஏற்பட்டுப்போகிறபடியால் தன் கேள்விக்கும் மறுமொழி சொன்னதும் பையன் "இனி யெல்லாரையும் கேட்டபிறகல்லவா எனக்கு கேள்விவரப்போகிறது" என்று நினைத்து தனக்கு இரண்டு இடங்களுக்குமேல் கேள்விவரும் வரையில் சும்மா கவனிக்காமலேயிருந்துவிடுவான். இதுதவிற இந்தமாதிரி கேள்விகேட்கும் உபாத்தியாயர் பழையபாடத்தைத் திருப்புவதாய் வைத்துக்கொள்வோம். உபாத்தியாயர் கேள்விபோடும் ரீதியைப் பிள்ளைகள் அறிந்தவர்களாகையால் தங்கள் தங்கள் ஸ்தானங்களுக்குத்தக்கபடி புஸ்தகத்தில் இன்ன விடத்திலுள்ள விஷயங்களைப் பற்றித்தான் கேள்விவரக்கூடுமென்று முன்னமே ஊகித்து அந்தந்த குறிப்பிட்ட பாகங்களைமட்டும் படிப்பார்கள். இதுகளுக்கெல்லாம் உபாத்தியாயர் இடம்கொடுக்கக்கூடாது. ஒரு பையனைக்குறிப்பிட்டு கேள்விபோடாமல் வகுப்பு முழுமையும் பார்த்துபோடவேண்டும். ஒவ்வொருபையனும் நம்மைத்தான் இதற்கு மறுமொழிசொல்ல ஆக்ஞாபிக்கப்போகிறாரோ என்று ஜாக்கிரதையுடன் இருப்பான். பிறகு யாரையாவது குறித்துக்காண்பிக்சலாம். ஒவ்வொரு கேள்விகேட்கும்பொழுதும் இப்படியே செய்யவேண்டியது. மேலேயெடுத்து சொல்லிய இரண்டு அஸந்தர்ப்பங்களும் இப்படி கேள்விபோடுவதில் நேரிடமாட்டா. இன்னாரையின்ன ஸமயத்தில் கேட்பார் என்பது நிச்சயமாய் ஊகிக்க முடியாதாகையால் எல்லாரும் பாடத்தின் எல்லா பாகங்களிலும் சிரத்தைவைத்து கவனமாயிருப்பார்கள்.

**பிள்ளைகளின் மறுமொழிகள்.**—இவைகளும் ஸ்பஷ்டமாயும் கேள்விகளையொத்தவையாயும், கேள்விகளில் கண்டவிஷயங்களை யனுசரித்தவையாயுமிருக்கவேண்டும். கூடியவரையில் பிள்ளைகள் தங்கள் சொந்த வார்த்தைகளைக்கொண்டே மறுமொழிசொல்லவேண்டும். புஸ்தகங்களிலிருந்து கண்மூடித்தனமாய் ஒப்புவிக்கச் செய்யலாகாது. ஒருவிஷயத்தை தாங்கள் சொந்த வார்த்தைகளைக்கொண்டு சொல்ல முடிந்தால்தான் அவர்களுக்கு விஷயம் நன்றாய்தெரிந்ததென்று நிச்சயிக்கலாம். இவ்விடத்தில் ஒரு சங்கதி உபாத்தியாயர் ஞாபகத்தில் வைக்கவேண்டியது. ஒரு கேள்விக்கு ஸரியான உத்திரம் அனேகர்கொடுக்கமுடியாமல் புத்திகூர்மையுள்ள ஒரு சிறுவன்மட்டும் சொல்லக்கூடியதாயிருக்கும். அப்படியவன் சொன்னவுடன் மேல்சங்கதிக்கு தாவிவிடாமல் சொல்லத் தெரியாதிருந்த பிள்ளைகளைக்கொண்டு அந்த விடையைப் பலமுறை சொல்லுவிக்கவேண்டும். ஒருவன் தப்புவிடை கொடுத்தால் அவனைத்தாண்டி யடுத்த பையனைக் கேட்கப்போகாமல் முதலில் தவறின பையனுக்கே கேள்விகள் போட்டு அவன் தப்பு இன்னதென்று அவனுக்குக் காண்பிக்கவேண்டியது.

சிறுபிள்ளைகளுக்குக் கற்பிக்கும் முறையில் முதல் பாகமாகிய 'கேள்விகேட்டல்' என்பதைப்பற்றி யிது வரையில் சொன்னோம்.

பிள்ளைகளுக்குப் புதிதாய் அறிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் எவ்வளவோ இருக்குமல்லவா. அவைகளை வியக்தமாய் நாம் சொல்லவேண்டும். எடுத்துச்சொல்லும் சக்தி முக்கியமாய் உபாத்தியாயரிடத்தில் இருக்கவேண்டும். கடின அம்சங்களை உப

மானங்களைக்கொண்டு விளக்கிக் காட்டவேண்டும். உபமானங்கள் பிள்ளைகளின் அநுபவத்துக்குள்ளடங்கினவாயும் ஸ்பஷ்டமானவையாயுமிருக்கவேண்டும். வஸ்துக்களை நேரில்கொண்டுவந்து காண்பித்தும் மிருகங்கள் முதலியவைகளின் படங்களை கருப்புப் பலகையில் வரைந்தும் பிள்ளைகளுக்குப் பாடத்தில் உத்ஸாகம் உண்டாகும்படி செய்யவேண்டியது. விஷயங்களைச் சிறுகச் சிறுகச்சொல்லிப் பிள்ளைகள் மனதுக்கு வாங்கினார்களாவென்று கேள்விமூலமாய்த்தெரிந்துகொள்ளவேண்டும். வாய் குறுகியிருக்கிற ஒரு சீஸாக்குள் ஒரு திராவகத்தை நிறப்பவேண்டுமேயானால் சொட்டு சொட்டாய்விட்டு முதல் சொட்டு கீழேயிறங்கினதைத் தெரிந்துகொண்டுதான் இரண்டாம் சொட்டு விடவேண்டும். ஒரே தடவையாய் சாய்த்தால் புட்டிக்குள் ஒரு பொட்டுக்கூட விழமாட்டாது. அதுபோலவே பிள்ளைகளுக்கும் சிறுகச்சிறுகத்தான் சொல்லவேண்டியது. அப்படி சொல்வதுடன் உடனுக்குடன் கேள்வி போட்டு அதைப்பிள்ளைகள் மனதுக்கு வாங்கினதாகத்தெரிந்த பிறகுதான் மேல்சங்கதி சொல்லவேண்டும். மூன்று நான்கு விஷயங்கள் இந்தப்பிரகாரம் கற்பித்தபிற்பாடு அவைகளையெல்லாம் ஒருதடவை திருப்பவேண்டும். பழையபாடங்களில் பிள்ளைகளை யடிக்கடி பரீக்ஷித்தல்வேண்டும்.

சுருக்கமாக, சிறு பிள்ளைகளுக்குக் கற்பிக்கும் முறையில் அடங்கிய விஷயங்களாவன:—(1) கேள்விகேட்டல்; (2) தெரியாத விஷயங்களை விளக்குதல்; (3) தகுந்த உபமானங்களை உபயோகித்தல்; (4) பிள்ளைகள் தப்புவிடைகள் கொடுத்தால் அவைகளை அவர்களே திருத்திக்கொள்ளும்படி செய்தல்; (5) பாடத்தின் மத்தியிலும் கடையிலும் சொன்ன அம்சங்களைத் திருப்புதல்; (6) அடிக்கடி பரீக்ஷித்தல்.

---

# சிறுவர்க்கானபக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

---

## கழுதை.

(1) ஐரோப்பாக்கண்டத்திலே ஒரு சண்டைக் கப்பலின் தளகர்த்தனுடைய கழுதையானது ஜிப்ரால்டர் என்னும் ஊரிலிருந்து மால்ட்டா என்னும் தீவுக்குப்போகும் கப்பலொன்றில் ஏற்றியனுப்பப்பட்டது. போகின்ற வழியில் கப்பலானது கால் என்னும் முனையின் சமீபத்திலே உள்ள மணல் திட்டுகளிலே பாய்ந்துவிட்டது. அதில் நின்றும் கரைக்குப்போய்க்கொண்டிருந்த ஒரு படகானது சமுத்திர அலைகளின் கொந்தளிப்பால் தலைகிழாகக் கவிழ்ந்துகொள்ளவே கழுதையைத்தூக்கிச் சமுத்திரத்தில் எறிந்துவிட்டார்கள். அப்படிச்செய்தும் அந்தக்கழுதையானது தான் புறப்பட்ட ஜிப்ரால்டர் என்னும் ஊரைப்போய்ச்சேர்ந்து, தான் வழக்கமாகக் கட்டிவைக்கப்படும் லாயத்தை அடைந்தது. அந்தப்பிராணி சமுத்திரத்திற்கு இரையாகாமல் தப்பித்துக்கொண்டது மாத்திரமேயல்லாமல் சிறிதும் வழி பிசகாமல் 200-மயில் தூரத்தை வெகு சீக்கிரத்தில் கடந்துபோய்த் தன் யதாஸ்தானத்தை அடைந்தது மிகவும் ஆச்சரியம்.

(2) இங்கிலாந்தின் வடக்கிலுள்ள ஒரு ஜில்லாவிலே ஒரு சில்லரை வியாபாரி தன் சரக்குகளை ஒரு கழுதையின்மேல் ஏற்றிக்கொண்டுபோய் நெடுந்தூரத்துக்கப்பால் உள்ள கிராமங்களிலே சரக்கை விற்பனைசெய்து வருவது வழக்கம். அவன் வயதுமுதிர்ந்த கிழவனானபடியால் அந்தக் கழுதையின் சேணத்தையாகிலும் அல்லது அதன் வாலையாகிலும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு போவான். ஒருதரம் நல்ல மாரிகாலத்தில் கனக்கப்பனிபெய்து மேடிட்டு இருந்த ஒரு நிர்மாநுஷ்யமான வெளியிலே கழுதை ஒரு பக்கமும் அந்தக் கிழவன் ஒரு பக்கமுமாகப் புதைபட்டனர். அப்படியிருக்கையில் கழுதையானது சற்றுநேரத்தில் தட்டித்தடுமாறி எழுந்து தன் எஜமானனை இங்குமங்கும் தேடிக்கண்டுபிடித்து அவன் கிட்டப்போய் முதுகைக் குனிந்துகொடுத்து தன் எஜமானன் தன் வாலை இசைவாகப் பிடித்துக் கொள்ளும்படியான விதமாக நின்றது. அவனும் வாலைக்கெட்டியாகப் பிடித்துக்கொள்ளவே அவனை அந்தக் கழுதையானது மெதுவாக இழுத்துக்கொண்டுபோய் மனிதர் ஒத்தாசை கிடைக்கக்கூடிய இடத்தில்விட்டது. கிழவனும் பிழைத்துக்கொண்டான். இவ்வளவு விசுவாசமுள்ள பிராணியை நாம் **கழுதை! கழுதை!** என்று இகழ்ச்சி செய்யலாமா!

(3) ஒரு துரைமகன் அதிக நேர்த்தியானதாயும் புத்திகூர்மையுள்ளதாயும் இருந்த ஒரு கோவேறு

கழுதையைவைத்து வளர்த்துவந்தான். அவனுடைய சிறுவர்கள் தங்கள் வீட்டின் சமீபத்திலே உள்ள தோட்டம் மைதானம் முதலான இடங்களில் உலாவப்போனால் அந்தக் கழுதையும் அவர்களுடனே கூடப்போகும். அவர்கள் கையில்வைத்துக்கொண்டு தின்கிற தோசை, அப்பம், கிச்சிலிப்பழம், இலந்தப்பழம், மிட்டாய் முதலிய பண்டங்களையும் அவர்கள் குடிப்பதான பால், பீர், தேத்தண்ணீர் முதலான பானங்களையும் பங்கு வாங்கி சாப்பிடும். சுக்குச்சாராயம் ஒன்றுமாத்திரம் அதற்குச் சரிப்படுகிறதில்லை. ஏனென்றால், ஒருமுறை சுக்குச்சாராயம் இருந்த புட்டியைத் திறக்கும்போது அதை மூடியிருந்த கார்க்கானது படால்! என்ற வெடி சப்தத்துடனே மேலே கிளம்பி அதன் மூக்கின்மேல் நன்றாய்ப்பட்டது. இதை அது எப்போதும் மறக்கிறதில்லை. யாராகிலும் சுக்குச்சாராய புட்டியைக்கையில் எடுத்துவருவதைப் பார்த்தால்கூட அது வெகு சீக்கிரமாய் ஒதுங்கி ஓடிப்போய்விடும். இந்தக் கழுதையானது இரவில் சுற்றிலும் யாதொரு அடைப்பில்லாத ஒரு கொட்டாரத்தில் விடப்பட்டிருப்பது வழக்கம். அந்தக் கொட்டாரத்திலிருந்து அடுத்த புழைக்கடைக்குப்போனால் போகலாமே ஒழிய வீட்டைச் சேர்ந்த சமையல்கட்டு முதலான இடத்துக்குப்போகமுடியாது. சமையல்கட்டின் கதவானது இரண்டு தாழ்ப்பாளிட்டு ஒரு கொக்கியும் மாட்டப்பட்டிருக்கும். ஒருநாள் காலையில் இந்தக் கதவு திறக்கப்பட்டிருந்ததையும் கழுதை காலடிகள் அடியில் படிந்திருப்பதையுங்கண்டு வீட்டிலிருந்தவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஆனாலும் உயரத்தில் தைத்திருந்த தாழ்ப்பாளையும் கொக்கியையும் கழுதை திறந்திருக்குமென்று யார்தான் நினைக்கக்கூடும். வீட்டு எஜமானன் மாத்திரம் ஒருநாள் இரவில் மெத்தையின் மேல் தன் படுக்கையறையின் ஜன்னலின் மூலமாய்ப் பார்த்திருக்கையில், அந்தக் கழுதை பின்னங்காலின்மேல் பலத்தைத் தாங்கிக்கொண்டு நிமிர்ந்து மூக்கினாலும் வாயாலும் உயர இருந்த தாழ்ப்பாளைக் கழற்றி பின்பு மற்றொரு தாழ்ப்பாளையும் கொக்கியையும் கழற்றிவிட்டு சந்தடி பண்ணாமல் உள்ளே போய்க் கொஞ்சநேரத்துக்கெல்லாம் ஒரு சீப்பு வாழைப்பழத்தை எடுத்துக்கொண்டு வெளியில்வந்தது. வந்தவுடனே பழத்தைக் கீழேவைத்துவிட்டு மறுபடியும்போய் தாழ்ப்பாளைப் பழையபடி போடமுடியாமல் கொக்கியை மாத்திரம் மாட்டிவிட்டுவந்து சாவகாசமாய்ப் பழத்தைச் சாப்பிட்டது. இது செய்தியெல்லாம் முடிவதற்கு முன்னே அந்த துரைமகன் அண்டை யயலில் உள்ளவர்களைக் கூப்பிட்டு அந்த அதிசயத்தைக் காண்பித்தான். இந்தப் பிரகாரம் இந்தக் கழுதையானது தான்செய்கிற காரியத்தை வீட்டுவிளக்குகள் எரிகிறவரையில் செய்யாமல் வீட்டுவிளக்குகள் அவிந்தபின்னரே செய்வது வழக்கமாம். இப்படிப்பட்ட கழுதையை நீங்கள் எங்காகிலும் கண்டால் அது சங்கதியை எங்களுக்குத் தெரிவியுங்கள்:

## BOOKS RECEIVED.

We have to acknowledge with thanks the receipt of the following Books and Publications :—

பிரேமகலாவத்யம் :—பிரேமன், கலாவதி என்னும் இருவரைப்பற்றிச் சொல்லும் விநோதகதை, ஸ்ரீ. வை. குருஸ்வாமி சர்மா அவர்களால் இயற்றப்பட்டது. (Paper cover) விலை அணா 12, தபாற்செலவு பிரத்தியேகம் 2 அணா, (Can be had of the Secretary, *D. K. Agency, Triplicane.*)

'*The Monist,*' (Open Court Publishing Co., Chicago), for October 1894, contains as usual several very learned Articles besides an elaborate comparison between Budhism and Christianity, by the learned Editor, Dr. Paul Carus.

'*The Hand and Eye,*' (O. Newmann & Co., London), for October, contains several valuable papers read at the recent Froebel Conference held at London.

'*Light of the East.*'—We have received the October number of this very valuable Monthly Magazine. It contains in a serial form the Geetha with Sankara's commentary and valuable Notes on Yogic practices, Thought-Reading and Clairvoyance. It is edited by the well-known S. C. Mukhopadhaya, M. A., and supplies a long felt want. Educated Hindus in whom the spirit of earnest enquiry has been aroused by the present agitation in favor of Hindu Religious Revival will find it to be of invaluable help to them.

"*The Indian Pocket Diary*" for 1895, Price As. 4. :— சென்னை ஸ்ரீநிவாச வரதாசாரி அண்ட் கம்பெனியார் போட்ட இந்ததினசரி பாக்கெட் புஸ்தகம் ஒருநாளைக்கு ஒருபக்கம்விட்டு இங்கிலீஷ், தமிழ், தெலுங்கில் தேதிவிவரங்கள் அச்சிட்டு நேர்த்தியாய் பயிண்ட் செய்யப்பட்டிருக்கிறது.

"*The National Pocket Diary*" 1895, Price As. 4. :— ரிப்பன் ப்ரெஸ்ஸில் போடப்பட்ட இந்த தினசரி பாக்கெட் புஸ்தகம் நேர்த்தியாக பயிண்ட் செய்யப்பட்டு, வழக்கமாய் இப்புஸ்தகங்களில் அச்சிடப்படும், பொதுப் பிரயோசனமான விஷயங்களோடு (Wages Table,) (Exchange Table) இவைகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதில் இங்கிலீஷ், தமிழ், தெலுங்கு, மாசம்தேதிகளோடு முஸ்லீம்மாதந்தேதியும் இங்கிலீஷ் எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

*Tales of an Indian Detective* (in Tamil,) By Pandit S. M. Natesasatri, B. A., M. F. L. S. "தானவன் என்னும் போலீஸ் நிபுணன் கண்டுபிடித்த அத்புதக் குற்றங்கள்" என்னும் பெயரால் வெளியாயிருக்கும் இப்புஸ்தகத்தில் 5. கதைகளிருக்கின்றன. இவை போலீஸ்இலாகா இன்ஸ்பெக்டர் ஜெனரல் கர்னல் போர்ஷியஸ் அவர்களுடைய கோரிக்கைக்கிணங்கி போலீஸார் புத்திவிர்த்திக் குபயோகமாகும்படி எழுதப்பட்டதாயினும் மற்றவர்களுக்கும் வாசிக்க இனிமையாயிருக்கும். விலை ரூபா 1. தபாற்கூலி 2 அணா.